





அவர்கள் தோற்றத்திலே
ஒற்றுமையில்லை, ஆனால்
அவர்கள் அனைவரும்
உபயோகிப்பது
பரிபூரண ஒப்பனைச்
சாதனமான

க்ருக்ஸ்
# லாக்டோ-காலமைன்

இழைவான மென்மை வாய்ந்த
க்ருக்ஸ் லாக்டோ-காலமைன் எத்தகைய
குறைபாட்டையும் ஒளித்துவிடும்
பரிபூரணஒப்பனைச் சாதனம்.
நாள்தோறும் சருமத்தின்மீது தடவுங்கள்
லாக்டோ-காலமைன். இதமான
ஆற்றும் குணமுள்ள காலமைன்,
செறிவூட்டும் செயல் திறனுள்ள
விட்ச் ஹேஸல் இரண்டும் இணைந்து
உங்கள் சருமத்திற்கு எழிலூட்டும்.

க்ருக்ஸ்
# லாக்டோ-காலமைன்

மாசில்லா அழகுக்கு!
மேலும் உங்களுக்கு உரிய அழகு
சாதனங்கள் லாக்டோ-காலமைன்
டால்கம் பவுடர் மற்றும் க்ரீம்.

களவிட்டுமுடியாத க்ருக்ஸ் ஸீலும்,
க்ருக்ஸ் சின்னமும் இருக்கிறதா
என்று கவனித்து வாங்குங்கள்.
க்ருக்ஸ் இன்டர்:ப்ரான் லிமிடெட், பம்பாய்-25




CIL. 71 TM

# கல்கி பொருளடக்கம்

பிலவ வைகாசி 6 - மே 19



"கல்கி"யில் வெளியாகும் கதைகளிலுள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே



படவிளக்கம் 6ம் பக்கம் →



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ☐ இதழ் 42



# முதன் மந்திரிக்கு வாழ்த்து

*ஏ*ந்த மாகாணத்தமைச்சரும் பெருத-பெற முடியாத கௌரவத்தைப் பெற்று நமது அன்புக்கும் மதிப்புக்கும் உரியவரான முதலமைச்சர் ஊர் திரும்பி வருகிறார். வரவேற்புக்களும் பாராட்டுக் கூட்டங்களும் வரம்பு மிஞ்சி நடைபெறும்.

உலகம் சுற்றுவதனால் அடையக்கூடிய அறிவும் நிறைய அடைந்து திரும்புகிறார். இது தமிழ்நாட்டின் பாக்கியம். பாரத சமுதாயத்தினின்று பிரிந்து தனித்துப் போகும் எண்ணம் இனி இம்மியளவும் இல்லை என்று நிச்சயமாகக் கூறலாம்.

தென்னாட்டு மக்களுக்குள் இருந்து வரும் வேறுபாடுகளும் அவ் விதமே முதலமைச்சர் உள்ளத்தில் இனி வேலை செய்ய மாட்டாது என்றும் துணிகரமாகச் சொல்லலாம். என்னுடைய வாழ்த்து ஒரு பெரிய பொரு ளல்ல. நான் இடையறாது வணங்கும் பகவான் திரு அண்ணாதுரை அவர் களைக் காத்துக் காப்பும் காவலுமாக இருப்பானாக.

ஃ ஃ ஃ ஃ

*ஜா*திகள் நிறைந்த நம்முடைய நாட்டில் காங்கிரஸ் கட்சியும் ஒரு ஜாதியாகி விட்டது. அந்த ஜாதிப்பற்றும் மற்ற ஜாதிப் பற்றுகளைப் போலவே வேலை செய்து வருகிறது. ஜாதிப்பற்று பகுத்தறிவுக்கு உட் படாது. பற்று என்பது பகுத்தறிவுக்கு நேர் விரோதமான ஒரு வேகம். திரு அண்ணாதுரை கவனிக்க வேண்டியது என்னவென்றால், தற்போது காங்கிரஸ் ஓரளவு புத்துயிர் பெற்று வந்திருக்கிறது. இதற்குக் காரணம் நான் குறிப்பிட்ட காங்கிரஸ் என்கிற ஜாதிப்பற்று. 'நிருவாகத்தில் வித்தியாசம் இல்லை; ஆனபடியால் நம்முடைய ஜாதியை நான் ஏன் விட்டு விட வேண்டும்' என்கிற வாதம் வேலை செய்து வருகிறது. "தி. மு. க. நிருவாகம், நீதி நியாயம் அறம் இவற்றைக் கண்டிப்பாகக் கடைப்பிடித்து நிற்கிறது: அநியாயத்தைப் பொறுக்க மாட்டாது; வரும் தேர்தலைப் பற்றி பயந்து தன் கடமையைச் செய்யாமலிருக்காது" என்று மக்கள் அறியும் படி நடந்துகொள்ள வேண்டும். பயம் என்னும் பேயை ஓட்டிவிட்டு நிருவாகம் நடத்த வேண்டும். கட்சியை மறந்துவிட்டு நிருவாகம் நடத்த வேண்டும். அந்தப் பெரிய தகுதியைத் தற்போது திரு அண்ணாதுரை அடைந்து விட்டார்.

நான் முதலமைச்சருக்கென்று சொல்லும் யோசனைகள் எல்லாம் அவருக்குத் தேவையில்லை. அவருக்கே விஷயமெல்லாம் தெரியும். ஆனால் அவை அமைச்சர்களுடைய அடியார்கள் கவனிக்கவேண்டிய விஷயங்கள்.

10-5-68

சக்ரவர்த்தி ராஜகோபாலாசாரி


திட்டக் கமிஷன்
எப்படி முதலீடு செய்வது?


அதிகாரி
எப்படி நஷ்டமடைவது?


மந்திரி
எப்படி விளக்குவது?
PK

# சுதந்திர வீரர்களே சுதந்திர விரோதியாயினர்

சர்க்கார் ஒரு தொழிலை நடத்துவது வேறு; கூட்டுறவு முறையில் தொழில் நடத்துவது வேறு. கூட்டுறவு முறையில் தொழில் நடத்தும் ஒவ்வொருவரும் உற்பத்தியை அதிகமாக்குவதிலும் சரக்கின் தரத்தை உயர்த்துவதிலும் சுய ஈடுபாடு கொண்டோராவர். சர்க்கார் மேற்பார்வையில் நடக்கும் தொழிலில் இந்தச் சுய ஈடுபாடு கிடையாது. 'நஷ்டமேற்பட்டால் அதைச் சர்க்கார்தானே ஏற்கப் போகிறது? என்னை அது பாதிக்காதே!' என்பதே சர்க்கார் தொழிலில் உள்ளவர்களின் மனப் போக்காகும். மனம் தான் விளைவுகளை உண்டாக்குவது; தொழில் செய்கிற கையோ காலோ அல்ல. எனவே, சர்க்கார் தொழிலில் உள்ளவர்களின் மனப் போக்கு உற்பத்தியை எப்படிப் பாதிக்கும் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

இங்கு கூட்டுறவுத் தொழில் முறை என்று சொல்லப்படுவது, இன்று ஆளும் கட்சிக்கு அடங்கி நடக்கிற கூட்டுறவுச் சங்கங்களைக் குறிப்பிடுவதாக எண்ணக் கூடாது. இன்றைய கூட்டுறவுகளைப் பற்றி அனைவருக்கும் தெரியுமாதலால் அது குறித்து அதிகம் சொல்ல வேண்டியதில்லை. ஒரு நிறுவனத்தின் நிதியைக் கட்டுப்படுத்தும் சக்தி சர்க்காரிடம் இருந்தால் அந்த நிறுவனம் ஆள்கிற கட்சியின் கருவியாக வேண்டியதுதான். எனவே, உண்மையான கூட்டுறவு முறையை எண்ணும் போது இன்றைய கூட்டுறவுச் சங்கங்களைப் பார்த்து முடிவு கட்டலாகாது.

அரசியல் சாஸனப்படி எப்படி நீதி பரிபாலனத் துறையானது சர்க்காரின் ஆதிக்கத்திலிருந்து சுதந்திரம் பெற்றுள்ளதோ, அதே போல், கட்சிப் பற்றற்று நடக்க வேண்டிய நிறுவனங்கள் யாவும் ஒரு சுதந்திரமான அமைப்பாகத் தமது சுயேச்சையான கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவரப்பட வேண்டும். ருஷியாவில் சர்க்காரின் தொழில் மேற்பார்வையை நிர்ப்பந்தத்தின் மீது பரிபூரணமாக்கினார்கள். அது பலனளிக்கவில்லை என்று வியக்தமாகியுள்ளது. அவ்வளவு நிர்ப்பந்தமில்லாவிடினும், அவ்வளவு பூரணமாக இல்லாவிடினும், நம் நாட்டிலும் சர்க்காரின் தொழில் மேற்பார்வையைப் பரீட்சை பார்த்து வருகிறார்கள். ஒவ்வொரு தேசத்துக்கும் தனி மரபும், மனப்பாங்கும், சிறப்புக் குணங்களும், குணவீனங்களும் உண்டு. இவை மற்ற நாடுகளுக்குப் பொருந்தா. ஒருசிலர் கூச்சல் போடுவதால் அவ்வாறு கூச்சலிடாத மற்ற பெரும்பான்மை மக்களை அமுக்கிவிட முடிகிறது. இந்த ரீதியில் சிலர் பிறநாட்டுக்கு மட்டும் பொருந்தும் பிரசார கோஷங்களை நம் நாட்டில் பெரிதாக எழுப்பி வருகிறார்கள். எனினும், நம் நாட்டின் சரித்திரமும், சமயமும் தேச வாழ்வின் மீது பதித்துள்ள முத்திரையை வெறும் கோஷத்தால் அழித்துவிட முடியாது.

நம் நாட்டின் தலைசிறந்த தலைவர்கள், பெருமதிப்பு வாய்ந்த தலைவர்கள் ஏறக்குறைய இருபதாண்டுகளாக இத்தேசத்தை ஆண்டனர். எனினும் அவர்களால் சர்க்காரின் தொழில் பிரவேசத்தை நம் நாட்டில் வெற்றிகரமாக்க முடியவில்லை. இது நாம் அநுபவத்தில் கண்ட உண்மை. இப்போது முன்னிருந்த பெருந் தலைவர்கள் இல்லை. அவர்களைவிடச் சிறிய மனிதர்களைக் கொண்ட கோஷ்டி ஆட்சிப் பொறுப்பைப் பெற்றுள்ளது. இவர்கள் பகுத்தறிவுப்படியும், பழைய

---

**காமகோடியின்**



**கருணைமொழி**

அம்பாளுடைய கடாட்சம் கிடைத்தால் எவ்வளவு காமத்தை உண்டுபண்ணும் வஸ்துவாக இருந்தாலும் அது காமத்தை உண்டுபண்ணாது. எவ்வளவு பணத்தாசையை உண்டாக்குகிற வஸ்துவாக இருந்தாலும் அது பணத்தாசையை — லோபத்தை — உண்டாக்காது. காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாத்சரியம் ஆகிய துர்க்குணங்களில் ஒன்றும் இல்லாமல் சித்தம் பரிசுத்தமாக இருப்பதற்கு அம்பாளைத் தியானிக்க வேண்டும். நித்தியம் இந்த எண்ணத்தோடு, 'அம்மா, ஒரு துர்க்குணமும் இல்லாமல் என் சித்தத்தைப் பரிசுத்தமாக்கு' என்பதாக அம்பாளின் நாமத்தை ஸ்மரிக்கும் பழக்கம் வரவேண்டும். அந்தப் பழக்கம் முற்றினால் சித்த சுத்தி தானே உண்டாகிவிடும். அம்பாளுடைய சரணாரவிந்தம் ஒன்றிலே நம் மனம் எப்போதும் இருப்பது ஒன்றுதான் சிரஞ்சீவித்துவம்; சித்சுகத்தியோடு இருந்து கொண்டு அவளுடைய சொரூபத்திலே மனசை நிறுத்தி, அம்பிகையின் குழந்தையாக இருந்து கொண்டு, ஆத்மாவைப் பரமானந்தத்திலேயே இருக்கும்படியாகச் செய்ய வேண்டும்.

'' அடுத்த தேர்தலுக்கு இன்னும் நாலு வருஷங்கள் இருக்கிறது, அப்பனே! இப்போது முதற் கொண்டே ஏன் இந்தத் துடிப்பு?'' என்று கேட்கத் தோன்றுகிறது நமக்குச் செல்வன் கண்ணனுடைய புகைப் படத்தைப் பொருளடக்கப் பகுதியில் காணும்போது.

படம் அனுப்பியவர்: சோமநாத்.

அநுபவம் உணர்த்தும் உண்மைக்கு ஒவ்வவும் செயலாற்றுமல் பழைய கோட்பாடுகளையே விடாமல் பின்பற்றி வருகின்றனர். மரித்துப் போன ஒரு கையின் பிடியில் தாமாகவே கைதிகளாகச் சிக்கிக் கொண்டது போல் இன்றைய ஆட்சியாளர் நடக்கின்றனர். பழைய கொள்கையைத் தாம் அநுசரிக்கா விடில் மக்கள் மீது தமக்குள்ள செல்வாக்கை இழக்க நேரிடும் என்று அவர்கள் அஞ்சு கிறார்கள். உயிர்த்துடிப்புள்ள அறிவினால் பழைய கொள்கைகளை ஆராய்ந்து பாரா விடில், பழைய கொள்கைகள் இறுக்கமற்ற வறண்ட தத்துவமாக வேண்டியதுதான். வறட்டுக் கொள்கைப் பிடிவாதம் என்பது உறுதியோ, தைரியமோ ஆகாது. செத்த பிணத்தைக் கொண்டு நமது பொருளாதாரச் சிக்கலைத் தீர்க்க முடியாது. இந்த உண்மை நிலையைக் காண ஆட்சிக் கூட்டத்தினருக்கு இஷ்டமில்லை.

இவையெல்லாம் முன்பே பலமுறை சொன்ன விஷயங்கள்தாம். இவற்றை மீண் டும் கூறுவதற்குக் காரணம், பழக்க விசேஷமோ, புதிதாக எழுதுவதற்கு விஷயம் இல்லாமையோ அல்ல. சர்க்காரின் தொழில் துறைத் தாக்குதலின் தீவிரத்தை உணர்ந் திருப்பதாலேயே மீண்டும் மீண்டும் எழுத வேண்டியதாகிறது. இப்போது பாங்குகள் மீது முற்றுகை இடப்பட்டிருக்கிறது. இது மக்களின் வாழ்வு முழுவதையும் இருள் மயமாக்குகிற பரிபூரணச் சர்க்கார் ஆதிக்கத் திலேயே முடியும். பணத்தைப் புதைத்து வைப்பதாலோ, வேறு விதத்தில் ஒளித்து வைப்பதாலோ இந்த முற்றுகையிலிருந்து பெருமளவுக்குத் தப்பிவிட முடியாது.

தேச சுதந்திரத்துக்காக வெகு நீண்ட காலம், வெகு தீவிரமாகப் போராடிய ஒரு கட்சியே இப்போது தனி நபர் சுதந்திரத்தை விரும்பத் தகாத ஒரு விஷயமாகக் கருதுவது அதிசயமானதொரு துன்பக் கதையாகும். தேச சுதந்திர வீரர்களே தேசப் பிரஜை களுடைய சுதந்திரத்துக்கு விரோதிகளாகி யிருக்கும் விசித்திரத்தை இந்தியாவில் காண் கிறோம். 'ஹோம் ரூல்' இயக்கத்தைப் பிரிட் டிஷ் ஆட்சி எதிர்த்ததைவிடத் தீவிரமாக இன்றைய ஆட்சியாளர்கள் தனிமனித சுதந் திரத்தை எதிர்க்கிறார்கள். கம்யூனிஸ்டுகள் அமைதியாகச் செய்துவிட்ட உற்பாதமே இவ்விஷமத்துக்குக் காரணம். அறியா மக்களை ஏமாற்றுவதில் கம்யூனிஸ்டுகள் காங்கிரஸாரைவிட அதிக ஆற்றல் காட்டி விட்டனர். அந்த ஏமாற்றுதலைப் பகிரங்கப் படுத்தி உண்மையை உணர்த்தியிருக்க வேண்டிய காங்கிரஸாரோ அப்படிச் செய் யாமல் ஏமாற்று வித்தையில் கம்யூனிஸ்டு களுடன் போட்டியிடலாயினர். நிகர விளைவு: மக்களின் அறியாமை இரட்டிப்பு மடங்கில் கட்சிகளின் சொந்த லாபத்துக்காகப் பய னுவதே.

மக்களின் சுதந்திரத்தை விடாமல் எதிர்த்து வரும் சர்க்கார் மக்களின் விரோதியே. இந்த கைய ஆட்சி கொடுங்கோன்மையின் ஒரு வகையேயன்றி ஜனநாயகமாகாது.

தனிமனிதர்களின் வளத்திலிருந்துதான் சர்க்கார் சக்தி பெறுகிறது. அதன் சக்திக்கு வேறு ஊற்றுக்கள் கிடையாது. இப்படி உரு வான சக்தி 'பாங்கி'லிருந்து சர்க்கார் அள வுக்கு மீறி 'ஓவர் டிராப்ட்' வாங்கக்கூடாது. வேர் காய்ந்தால் மரம் பட்டுப் போக வேண் டியதுதான். சர்க்கார் இழுத்துக் கொள்வது எவ்வளவு, வேரில் விட்டு வைப்பது எவ்வளவு என்பதற்கிடையே சரியான சமன்பாடு காண வேண்டும். இதுவே நல்லாட்சிச் சாஸ் திரமும் நல்லாட்சிக் கலையுமாகும்.

**ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.**

---

அட்டைப்பட விளக்கம்

## பனி விளையாட்டு

**'' ஐயதண் பனி அள்ளினள்; அப்பினள் ''**—கம்பர்

கம்பராமாயணத்தில் ஒரு கட்டம். ராமன் மீது ஆறுக் காதல் கொண்ட சூர்ப்ப ணகைக்கு உடல் தகிக்கிறது. அதைக் குளிர்விக்க என்ன செய்வது என்று தெரியாமல் குளிர்ந்து விழுந்து கிடந்த பனியை அள்ளி எடுத்து உடல் மேல் எல்லாம் அப்பிக் கொண்டாளாம்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த கம்பர் எப்பொழுது சிம்லாவுக்கு எப்படிச் சென்றார் என்ற வியப்புத்தான் மேற்கண்ட அடியைப் படிக்கும்போது எழும்.

பஞ்சுபோல் உதிரும் பனியைத் திரட்டிக் குழந்தைகள் பல்வேறு உருவங்கள் செய் வதும், ஒருவர் மேல் ஒருவர் அள்ளி வீசி விளையாடுவதும் பனிக்காலத்தில் குளிர்ப் பிரதேசங் களான சிம்லா முதலான இடங்களிலும், ஸ்விட்சர்லாந்து, இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளிலும் சர்வ சாதாரணமாகக் காணும் காட்சி. ஆனால் 106 டிகிரி வெய்யில் தகிக்கும் இந்தக் கோடைக்காலத்தில் இப்படி ஒரு அட்டைப் படமா என்று நேயர்கள் வினவலாம்!

சிம்லாவுக்குப் போக முடியாதவர்கள் இந்தக் குளிர்க் காட்சியைப் பார்த்துச் சற்று வெப்பத்தை மறந்திருக்கலாம் அல்லவா?

# ராஜாஜியின் கருத்துக்கள்

பார்லிமெண்டில் மதுவிலக்குப் பற்றிய கேள்விகளுக்கு விடையளித்த சமூக நல மந்திரியாகிய ஸ்ரீ அசோக மேதா, மத்திய சர்க்காரிலும், ராஜ்ய சர்க்கார்களிலும் பணம் போதவில்லை என்ற காரணத்துக்காக மதுவிலக்கு பற்றி அரசியல் சாஸனம் கூறும் கொள்கையையே தலைகீழாக்கி யிருக்கிறார். காந்திஜி — நூற்றாண்டுக்குப் பொருத்தமான ஒரு சோக நாடகமாக மதுவிலக்குத் தளர்த்தப்படுகிறது. சாஸனக் கொள்கையின் இடத்தில் மக்களுக்குப் போதைப் பானம் தந்து, பணம் பண்ணி, நிர்வாகத்தை நடத்தும் புதுக் கொள்கை அமைக்கப்பட்டிருக்கிறது. சமூக நல மந்திரியாகிய ஸ்ரீ அசோக மேதா செய்கிற சமூக நலன் யாது?

ஃஃஃ

மத்திய சர்க்கார் நடத்தும் 81 அரசாங்கத் தொழில்களில் 13,000 ஊழியர்கள் உபரியாக இருக்கிறார்கள் என்று மக்கள் சபையில் ஸ்ரீமொரார்ஜி தேசாய் தெரிவித்துள்ளார். இவர்களை மற்ற இலாகாக்களில் அமர்த்திக் கொள்வதால் வெளிப்பார்வைக்கு நிலைமை சரியாகி விட்டதாகத் தோன்றும். ஆனால் தேசத்தின் சிக்கன நிர்வாகத்துக்கு இது உதவாது. அழுக்கைப் பரவலாக்குவது வேறு, சுத்தம் செய்வது வேறு.

ஃஃஃ

தேர்தலில் தோல்வி கண்டபின் சர்க்காரின் உயர் பதவிகளைப் பெற்றவர்கள் அடங்கிய ஒரு நீண்ட, கவர்ச்சிகரமான பட்டியலை ஸ்ரீ லோகநாத மிச்ரா மக்கள் சபையில் எடுத்துரைத்து, இது அவதூறுக்கு இடம் தருகிறது என்றார். இதற்குத் துணைப் பிரதமர் ஸ்ரீ மொரார்ஜி தேசாய், தேர்தலில் தோல்வி கண்டவர்களைத் தற்போது அவர்கள் நியமனமாகியுள்ள பதவிக்கு லாயக்கற்றவர் என்று சொல்ல முடியாது என்று பதில் கூறினார். ஸ்ரீ மொரார்ஜி தம்மால் காட்டக் கூடிய மிகச் சிறந்த காரணத்தைக் காட்டி விட்டார்.

ஆனால் இந்தக் காலத்தில் யாரையுமே தமது பதவிக்கு லாயக்கற்றவர் என்று நிரூபிக்க முடியாது. தோற்றுப்போன காங்கிரஸ் வேட்பாளர்களுக்கு பூர்வ அநுபவம் இல்லாத துறைகளில் பதவி அளிக்கப்பட்டுள்ளது. உயர்ந்த சம்பளமும் அளிக்கப்படுகிறது. இவர்கள் இப்பதவிகளை வகிக்க இன்னின்ன தகுதி பெற்றிருக்கிறார்கள் என்று எடுத்துக் காட்டாமல், இப்பதவியை வகிக்க இவர்களுக்குத் தகுதியில்லை என்று நிரூபிக்க முடியாது என்பதை உதவிப் பிரதமர் காரணமாகக் காட்டியிருப்பது விந்தை!

ஃஃஃ

காங்கிரஸை எதிர்த்துத் தேர்தல் வெற்றி காண வேண்டும் என்கிற ஆர்வத்தில் வலது அல்லது இடதுசாரிக் கம்யூனிஸ்ட்களுடன் தேர்தல் கூட்டுச் சேரத் தோன்றுவது இயற்கை. இது அபாயகரமான விளையாட்டு என்று நான் முன்பே பலமுறை தெளிவு செய்திருக்கிறேன். தம்மோடு கூட்டுச் சேர்ந்தவரையே பணயம் வைக்கிற சாமர்த்தியம் கம்யூனிஸ்ட்களுக்கு உண்டு. எனவே அவர்கள் வழியே சேராமலிருந்தாலொழிய நமக்கு ஆபத்துத்தான். கம்யூனிஸ்டுகளுடன் கூட்டுச் சேருவதன் விளைவு என்ன என்பதைப் பெரும்பாலான கூட்டணிச் சர்க்கார்கள் நிதரிசனமாகக் கண்டுவிட்டன. தங்களுக்கு அதிகாரம் செலுத்தும் ஆசை சிறிதும் இல்லை என்று பாசாங்குத் தியாகம் செய்வதில் கம்யூனிஸ்டுகள் வல்லவர்கள். சிறிது காலத்துக்கு இவ்வாறு அதிகார ஆசை காட்டாமல் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்வதன் மூலம் நீண்டகால அடிப்படையில் மற்ற கட்சிகளின் மீதும், நாட்டுப் பொருளாதாரத்தின் ஜீவாதார அம்சங்களின் மீதும் தம் பிடிப்பைச் செலுத்தும் சாமர்த்தியம் கம்யூனிஸ்டுகளுக்கு உண்டு.

ஃஃஃ

இந்தியாவில் சங்கீதக் கச்சேரிகளில்—வாய்ப்பாட்டாளனாலும் வாத்திய இசையாளனாலும்—சுருதிக்காகத் தம்புரா மீட்டப்படுகிறது. இசையின் ஒலி அளவைப் பெருக்கவும், அதற்கு ஆழம் கொடுக்கவும் தம்புரா பயன்படுகிறது. கச்சேரி முழுதும் இடைவிடாமல் ஒலிக்கும் தம்புரா மீட்டுப் போல், இந்திய சமய சிந்தனை முழுவதற்கும் ஆதார த்வனியாக ஒரு கருத்து உள்ளது. 'ஈசுவர சங்கற்பப்படியே எதுவும் நடக்கும்' என்கிற கருத்துத்தான் அது. இதனால் மற்ற நாட்டினர், ஹிந்து மதம் தலைவிதிக்கு அடிபணிவதையே மையக் கொள்கையாகக் கொண்டது என்று எண்ணுகின்றனர். இப்படி நினைப்பது, 'தம்புரா சுருதிதான் இந்திய சங்கீதத்தின் இதய அம்சம்; அதற்கு மேலாக இந்திய இசையில் எதுவும் இல்லை' என்று எண்ணுவதற்கொப்பாகும்.

'பாபம் செய்வது தவறு என்று தெரிந்திருந்த போதிலும், தான் அதில் விழுந்து விடக் கூடாது என்று விரும்பிய போதிலும் மனிதன் ஏன் பாபம் புரிகிறான்?' என்று பகவத்கீதையின் மூன்றாம் அத்தியாயத்தில் அர்ஜுனன் வினவுகிறான். இதற்குப் பதில் சொன்ன தெய்விக ஆசாரியன் இன்றைய நவநாகரிகப் பகுத்தறிவுவாதியைப்போலவே பேசுகிறான். மனிதனின் பூர்வ ஜன்ம கர்மத்தினால்தான் அவன் பாபத்தில் தூண்டப்பட வேண்டும் என முன்னமே விதிக்கப்பட்டிருக்கிறது என்று கண்ணன் கூறவில்லை. மனிதனின் விவேகத்தைச் சூழ்ந்து கொண்டு அவனைத் தவறான வழியில் இட்டுச் செல்லும் காமமும், குரோதமும், துவேஷமும் தான் பாபத்தில் செல்வதற்குக் காரணம் என்றே கூறினான். புத்தியைக் களங்கப் படுத்தும் இச்சக்திகளை வெல்லுவதற்கு மனிதன் தன் ஆன்ம பலம் முழுவதையும் திரட்டிப் போராட வேண்டுமென்று கண்ணன் கூறுகிறான். இம் முயற்சி வெற்றி காணும் என்று உறுதி கூறுகிறான். சங்கற்பவாதிகளான ஸயன்ஸ் அறிஞர்கள் சொல்வதைவிடப் பகுத்தறிவு சார்ந்த விடை கண்ணன் சொன்னது.

# பிறப்பால் விவசாயி; தொழிலால் சக்கிலி!

''நான் பிறப்பால் விவசாயி; தொழிலால் சக்கிலி'' என்று பெருமையுடன் கூறிக் கொள்ளுபவர் சென்னை அடையாற்றிலுள்ள மத்திய தோல் ஆராய்ச்சிக் கழகத்தின் தலைவர் டாக்டர் ஒய். நாயுடம்மா அவர்கள். எத்தொழிலும் உயர்ந்த தொழிலே என்று பூரணமாக நம்பி வேலை செய்து அவ்வுணர்ச்சியைத் தமது கழகத்தில் பரப்பி வருபவர் டாக்டர் நாயுடம்மா அவர்கள்.

டாக்டர் நாயுடம்மா அவர்கள் பி. எஸ்ஸி படித்துவிட்டு, வக்கீல் படிப்புக்குச் சட்டக் கல்லூரியில் சேர்ந்து முதல் வருஷப் படிப்புப் படித்துக் கொண்டிருந்த காலத்தில் (1941–42) சென்னை வண்ணாரப்பேட்டையில் பேராசிரியர் சேஷாசலம் தலைமையில் ஒரு சிறு தோல் ஆராய்ச்சிக் கூடம் நடந்து வந்தது. அங்கு ஓய்வு நேரங்களில் காலையிலும், பிற்பகலிலும் இலவசமாக ஆராய்ச்சி செய்து வந்தார் டாக்டர் நாயுடம்மா. ஒரு நாள் காலை எட்டு மணிக்குப் பேராசிரியர் யாருமில்லாதபோது ஓர் இளைஞன் ஆராய்ச்சிக்கூடத்தில் வேலை செய்வதைப் பார்த்த மேலதிகாரி, ''இந்த இளைஞன் எப்படி அனுமதிக்கப்பட்டான்?'' என்று பேராசிரியர் சேஷாசலத்தைக் கேட்டாராம். இந்தத் தர்மசங்கடத்திலிருந்து விடுபட, பதினேழுரை ரூபாய் சம்பளத்தில் பயிற்சி பெறாத கூலியாக வேலை செய்யும்படியும், அதை முகாந்திரமாகக் கொண்டு ஆராய்ச்சிக்கூடத்துக்கு வந்து ஆராய்ச்சிகள் நடத்தும்படியும் நாயுடம்மாவுக்கு யோசனை கூறினார் சேஷாசலம்.

அதன்படி ஆராய்ச்சி தொடங்கிய ஸ்ரீ நாயுடம்மா அந்த ஆராய்ச்சியிலேயே முழுமையாக ஈடுபட்டார். சட்டக் கல்லூரிப் படிப்பை ஓராண்டுடன் நிறுத்திக் கொண்டார். அமெரிக்காவுக்குச் சென்று ஓர் சர்வகலாசாலையில் டாக்டர் பட்டமும் பெற்றுத் திரும்பினார்.

டாக்டர் நாயுடம்மா அவர்கள் முக்கியமாக ஒரு விஞ்ஞான ஆராய்ச்சியாளர்தான். உலகில் இத்துறையில் ஈடுபட்டவர்களின் பெரு மதிப்பைப் பெற்றவர்தான். ஆனால் அவருடன் பேசிக் கொண்டிருக்கும் போது, இவர் ஒரு நல்ல வியாபாரி என்ற எண்ணம்தான் ஏற்படும். தோல் பதனிடும் துறையில் ஆராய்ச்சிகள் மூலம் புதிதாக ஏதாகிலும் கண்டுபிடித்தால் அதை மக்கள் ஏற்றுக் கொள்ளும்படி செய்வது என்பதில் ஆராய்ச்சியில் எடுத்துக் கொண்ட சிரத்தையை விட அதிகமான அக்கறை காட்டுகிறார்.



டாக்டர் ஒய். நாயுடம்மா

தோல் பதனிடும் தொழில் நமது நாட்டில் மிகப் புராதனமான தொழில். நமது தோல்களுக்கு வெளி நாட்டில் மிகுந்த மதிப்பு. வெளி நாட்டுச் செலாவணியை நமக்குப் பெருவாரியாகச் சம்பாதித்துத் தருவது தோல்.

நமது புராதன பாடம் செய்யும் முறைகளில் இருந்த சில குறைகளால் சில உயர்ந்த தோல் ரகங்கள் வெளிநாட்டிலிருந்து இறக்குமதியாகி வந்தன. ஆனால் சி. எல். ஆர். ஐ. யின் ஆராய்ச்சியின் பயனாக வெளி நாட்டு இறக்குமதி கட்டோடு நிறுத்தப்பட்டு அத்தகைய உயர்தர தோல் இங்கேயே செய்யப்படுகிறது.

அடையாறு சி. எல். ஆர். ஐ. ஆராய்ச்சிக் கூடத்தில் புதிதாக ஏதாகிலும் கண்டு பிடித்தால், அந்த ஆராய்ச்சியைப் பத்திரிகைகளில் வெளியிடுவதோடு நின்றுவிடாமல் தோல் பதனிடும் கிராமங்களுக்கே சென்று தோல் பதனிடுவோரிடம் ''நாங்கள் ஒரு முறையில் பதனிட்டுக் காட்டுகிறோம்; இதனால் நஷ்டம் ஏற்பட்டால் அதை நாங்கள் ஏற்றுக் கொள்ளுகிறோம். லாபம் ஏற்பட்டால் நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்கிறார் ஸ்ரீ நாயுடம்மா. பல சந்தர்ப்பங்களில் நிச்சயமாகப் பலனுள்ளதென நிரூபிக்கப்பட்ட விஞ்ஞான முறைகள்கூட அனுஷ்டிக்கப்பட முடியாமற் போவதுண்டு. இதைச் சமாளித்து வெற்றி காண வேண்டியதாகிறது.

சென்னையில் உள்ள மத்திய தோல் ஆராய்ச்சி நிலையத்தில் விஞ்ஞானத் துறையில் பட்டம் பெற்றவர்கள் மட்டும் ஆராய்ச்சி செய்கிறார்கள் என்றில்லை. தோல் பதனிடும் தொழிலில் ஈடுபட்ட சாதாரண மக்கள் இதில் ஏதாகிலும் புது முறைகளைக் கற்றுக் கொள்ள விரும்பினால் எப்பொழுது வேண்டுமானாலும் வந்து பயிற்சி பெற்றுத் திரும்பலாம். ''அப்படிப் பயிற்சி பெற்றவர்களுக்கு நாங்கள் அத்தாட்சிப் பத்திரம் வழங்குவதில்லை. அதற்குப் பதில் அவர்கள் 'நான் குறிப்பிட்ட துறையில் பயிற்சி பெற வந்தேன். அதில் அறிந்து கொள்ள வேண்டிய எல்லாவற்றையும் அறிந்து திரும்புகிறேன்' என்று எங்களுக்கு அத்தாட்சிப் பத்திரம் தந்துவிட்டுப் போக வேண்டும்'' என்கிறார் ஸ்ரீ நாயுடம்மா!

சொற்பத் தமிழறிவுடன் இத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களுக்கும் பயன்படும் வகையில், ''கிழக்கிந்திய முறையில் பதனிடுதலும் திரேஸ் தோல்களை ஒப்பனை செய்தலும்'', ''முடியுடன் பதனிடுதலும்பாம்பு, உடும்பு, முதலைத்தோல் பதனிடுதலும்'' என்பன போன்ற சிறுசிறு புத்தகங்களும் ''தோல் விஞ்ஞானம்'' என்ற மூன்று மாதங்களுக்கொரு முறை வெளியாகும் பத்திரிகையும் ஆராய்ச்சி நிலையத்திலிருந்து வெளியாகின்றன.


கருத்தைக்
கவரும்


கோயா


விந்தைப்
படைப்பு













# மேனி எழிலை அள்ளி அளிக்கும்

# மேட்டூர் சந்தன சோப்






மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை R.S. சேலம் ஜில்லா
மானேஜிங் ஏஜெண்ட்ஸ்
சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

Criterion-MC-1133





சீஸ்பரோ பாண்ட்ஸ் ஜெனரல் மானேஜர் திரு எஸ். எச். எஸ். மணி ஆஸ்திரேலியாவுக்கும், தூர கிழக்கு நாடுகளுக்கும் தொழில் நிமித்தமாகப் பயணமானார்.

மேற்கு மாம்பலம் அஹோபில மடம் ஓரியண்டல் உயர்நிலைப் பள்ளியின் விழாவுக்குத் தலைமை வகித்த திரு ஏ. எல். முதலியார் அவர்கள், அது பண்டைய பண்புகளோடு சிறப்பான முறையில் கல்வி புகட்டுவதைப் பாராட்டிப் பேசினார்.





நாக்பூர் அகில இந்திய ரேடியோ டைரக்டர் திரு எஸ். ஆர். வேங்கடராமன் அவர்களின் மனைவியார், நாக்பூர் தென்னிந்திய சபையில் நடனமாடின குமாரி கீதா ராகவனுக்கு அழகிய மின்விளக்கைப் பரிசாக வழங்குகிறார். குமாரி கீதா 'டபே' டெபுடி ஜெனரல் மானேஜர் திரு வி. ஆர். வி. ராகவனின் புதல்வி.

பத்மாலயா நாட்டிய கேந்திரத்தைக் கல்வி அமைச்சர் திரு நெடுஞ்செழியன் தொடங்கி வைத்தார். இந்திய சாஸ்திரியநடனங்களைபத்மாலயா மாணவிகள் வழங்கினர்.



சென்னை திருவல்லிக்கேணி ஸ்ரீ சரஸ்வதி கான நிலையத்தினர் கே. லலிதா டைரக்ட் செய்த ''திருப்பாவைச் செல்வி'' என்ற நாட்டிய நாடகத்தினைச் சென்ற 5—5—68 அன்று திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி ஸ்வாமி சபை அரங்கில் விமரிசையாக நடத்தினர். அச்சமயம் தொழிலதிபர் திரு கே. ஈசுவரன் நடனத்துக்குத் தலைமை தாங்கி ஒரு மலரை கே. லலிதாவுக்கு அளித்தார்.



மலக்பேட்டில் ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு
பல்லக்கின்மீது நின்று தரிசனம் தருதல்

# பாக்கிய நகருக்குப்

சித்திரை மாதம் தீபாவளி வருமோ? வந்தது. பாக்யநகர் எனப்படும் ஹைதராபாத், செகந்திராபாத்வாசிகளுக்கு ஏப்ரல் 26ந் தேதி தீபாவளி வந்தது. குழந்தை குட்டிகள் முதல் அனைவரும் விடியற்காலம் மூன்று மணிக்குள் ஸ்நானம் செய்து நல்லாடை உடுத்தி, சொந்தக் கார்களிலோ, பிரத்தியேகமாக ஏற்பாடு செய்யப்பட்ட பஸ்களிலோ பறந்தனர்.

அதோ பஜனை நாமாவளி, வேதகோஷம், நாயனம் காற்றினிலே வரும் கீதமாக ஒலிக்கிறது. வாகனங்களில் வருபவரும், நடந்து வருபவரும், ஓடி வருபவருமாகக் கூடியவரை வரிசை வரிசையாக நிற்கின்றனர். எல்லோர் இதழ்களும் 'ஹர ஹர...சிவசிவ...நாராயண நாராயண' என்று உச்சரிக்கின்றன. 'சங்கர சங்கர' என்று இதயங்கள் பொங்குகின்றன.

அதோ வருகிறார்....இல்லை, இன்னும் ஒரு மணியாகும்... அரைமணியாகும்... 'உப்பளி' விருந்து நடந்தே வருகிறாராம்...இல்லை, பாதி வழியில் நிறுத்திப் பல்லக்கில் ஏற வைத்திருக்கிறார்களாம்—பாதி வழி எதிர்கொண்டு ஓடி ஓடிப் போய்ச் செய்திகள் சேகரித்து வந்த 'ஸ்கூட்டர்' பக்தர்கள் விடுத்த அறிக்கை இவை. பக்தர்கள் மனமெல்லாம் எங்கோ, உடல்தான் அங்கு.

''ஹர ஹர சங்கர.... ஜயஜய சங்கர...'' கோஷங்கள் வலுக்கின்றன.

அதோ தெரிகிறது பல்லக்கு. வானோர் பூமியை விழைவதுபோல் வானில் வருணனும், வாயுவும், சூரியனும் பிரத்தியக்ஷமாகின்றனர். உதயசூரியனின் இனிய தோற்றத்தில், ஜில்லென்று வாயு சாமரம் வீச, வருணன் பன்னீர் தூவுவதுபோல் தூவானம் உதிர — ஆகா! இதென்ன சுபசூசகம்!

''ஹரா ஹரா....... ஓம்.....ஓம்.....!''

மந்திரங்கள் முழங்க, பரமேசுவரனும், முருகனும் பிரத்தியட்சமானது போல் இரு ஜோதிகள் தோன்றுகின்றன. பூமி குளிர்கிறது.

மெய் சிலிர்க்கிறது. எத்தனை நாள் தாகம் அது! ஆவலுடன் அந்த கடாக்ஷ ரசத்தை மாந்திப் பருகுகின்றனர். ஆசை அடங்கவில்லை!

பல்லக்கைச் சூழ்ந்து வரும் தம் குழந்தைகளின் ஆர்வத்தைப் பார்த்தார் கருணாமூர்த்தி! பல்லக்கை நிறுத்தினார். அதோ! பல்லக்கின் மீது ஜோதி ஸ்வரூபம் ஒளிவீசுகிறது. அடியார் ஆசையுடன் அளிக்கும் புஷ்பங்களை அருளுடன் ஏற்றுக் கொள்கிறார். துளசி மாலையும், வில்வ மாலையும் அணிகிறார். நாராயண ஸ்வரூபமும் சிவ ரூபமும் கலந்து காட்சி தருகிறது.

''ஆகா! என்ன தரிசனம்! என்ன தரிசனம்! நமக்காக அவர் எத்தனை இடங்களில் பல்லக்கை நிறுத்தி அதன்மீது ஏறி நின்று தரிசனம் தருகிறார்! அவர் கருணைதான் என்ன!'' என்று மக்கள் உள்ளம் பொங்குகின்றனர்.

பல்லக்கு நகர்கிறது. வேதகோஷமும், பஜனை கோஷ்டியும் நகர்கின்றன. ஆந்திரா பாய்க் காலனியில் அமைக்கப்பட்ட பிரம்மாண்டமான பந்தலில் குழுமுகிறது கூட்டம்.

முப்பத்து நான்கு வருடங்களுக்குப் பிறகு, பக்தர்களின் நாலைந்து வருட முயற்சிகளுக்குப்பின், ஆறு மாதங்களாகத் தாண்டிவிடப்பட்ட ஆவலுக்குப்பின் ஏப்ரல் 26ந் தேதி விடியற்காலையில் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள் தமது பாததூளிகளால் . இரட்டை மாநகராகிய ஹைதராபாத் — செகந்திராபாத்தின் நுழைவாயிலான 'மலக்பேட்'டில் அடியெடுத்து வைத்துப் பூமியைப் புனிதமாக்கினார்கள். அவர்களுடன் இளைய ஸ்வாமிகளான ஸ்ரீ புதுப் பெரியவாளும் எழுந்தருளினார்கள்.

இருபத்தேழாந் தேதி காலை பக்தர்களின் கண்கண்ட கடவுளான கருணாமூர்த்தி மலக்பேட்டிலிருந்து எட்டு மைல் நடந்தே வந்துவிட்டார் என்று அறிந்த ஒவ்வோர் இதயமும் கசிந்தது. தொண்டர்களும், போலீசும் எத்தனை காபந்து செய்தும் சாலையின் இருபுறமும் குழுமியிருந்த மக்கள் போட்டி போட்டுக் கொண்டு ஜகத்குருவின் காலடியில் விழுந்தும், தொட்டும் வணங்கினர்.

செகந்திராபாத் பத்மராவ் நகரில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள கௌதாமடம் என்னும் ஸ்வராஜ்யா பிரிண்டிங் பிரஸ்ஸில் அமைக்கப்பட்டுள்ள பந்தலில் 27ந் தேதி காலை ஒன்பது மணிக்குப் புதுப் பெரியவாளும் அதன்பின் ஒரு மணி நேரத்தில் பெரியவாளும் பிரவேசித்தனர். கமிட்டிக் காரியதரிசிகள் சுபஸ்ரீயும், டி. வி. எஸ். கம்பெனி பார்த்தசாரதியும் தங்கள் முயற்சி ஓரளவு வெற்றிபெற்ற ஆசுவாசத்தின் அறிகுறியாக ஆனந்தப் பெருமூச்சு விட்டனர்.

# பகவான் விஜயம்



27-4-68 அன்று மலக்பேட்டிலிருந்து செகந்திராபாத்துக்கு எழுந்தருள ஆசார்ய சுவாமிகள் எட்டு மைல் நீளம் பாத யாத்திரை புரிந்தபோது வழியெங்கும் மக்கள் வரவேற்ற கோலாகலம்.

மனத்தில் இடமிருந்தால் இருக்கவும் இடம் உண்டு என்பதுபோல் உப்பலில் பெய்டுவின் டெக்ஸ்டைல்ஸ் முத்தையாச் செட்டி ஏற்பாடு செய்திருந்த பெரிய பந்தலிலும், மலக்பேட்டில் ஆந்திரா பாய்க் காலனியின் விசாலமான பந்தலிலும் இருந்ததைவிடப் பத்து மடங்கு அதிகமான ஜனங்கள் பிரஸ்ஸின் நீண்ட பந்தலுக்குள் ஓரளவுக்கு அடங்கி அமர்ந்தனர்! சுற்றுப்புறக் கிராமங்களிலுள்ள வசதிகள் ஓரளவு இங்கில்லை என்பது அநுபவ உண்மை. சுற்றிலும் மாடுகள் யானைகள் கட்டத் திறந்தவெளி, தனித்தனியே வெளியூரிலிருந்து வரும் பக்தர்களுக்கும், மடாதிபதிகளுக்கும் தங்க வசதி, கிணற்றுநீர் வசதி இவையெல்லாம் ஒன்று சேரக் கிடைக்க ஓர் இடம் செகந்திராபாத் வாசிகளுக்கு இந்தப் பிரஸ்ஸைத் தவிர வேறு ஏது? அவ்விடத்துச் சொந்தக்காரரான ஸ்ரீ கௌதாமஹேஹர் குடும்பத்தினர் பாக்கியசாலிகள்.

இருபத்தெட்டாம் தேதி முதல் இரண்டாந் தேதி வரை சங்கர ஜயந்தி விழாவைப் பெரியவர்கள் இவ்வூரில் கொண்டாடினார்கள். அவர்கள் பூஜையழகைச் சொல்வதா? அவர் தம் குருவை — ஆதிசங்கரரை அலங்கரித்து மகிழ்வதைச் சொல்வதா? மாலையில் யானை மேல் ஆதிசங்கர பகவான் அபிஷேக அலங்காரங்களுக்குப்பின் ஊர்வலம் வர, பின்னால் அரையில் ஒரு காவித் துண்டும், தண்டமுமாகச் சிறு பையன்போலக் கைகட்டிப் பெரியவாள் வரும் பவ்யத்தை வியப்பதா? அவர் தம் கையால் சாமரம் வீசி வரும் பக்தியில் நாமும் லயிப்பதா? லோக குருவான அவரே தம் குருவின் முன் இத்தனை பக்திசிரத்தையாக நின்றால், உலகப் பள்ளியில் அரிச்சுவடி மாணவர்களான நம்மைப் பற்றி என்ன நினைக்க ?

மாலை பூஜை முடிந்ததும், பெரியவாள் உபந்நியாசம். அதை மக்கள் எல்லாரும் கேட்டு ரசிக்க, கமிட்டியாரைவிடப் பெரியவாளே எடுத்துக் கொள்ளும் முயற்சி மக்களின் ஆவலுக்கு அவர் கொடுக்கும் மதிப்பைக் காட்டுகிறது. ஒருநாள் நடுக்கூட்டத்தில் மேஜையைப் போடச் சொல்லி முதல் விளக்கடியில் அமர்ந்தார். ஒரு நாள் கோபுர வாசலின் கீழ் அமர்ந்து வாயு பகவான் சாமரம் வீச, தெருவின் நாற்புறமும்கூட ஜனங்கள் அமர்ந்து, சௌகரியமாகக் கேட்டுத் தரிசிக்கும்படி அருளினார். ஒரு நாள் விசிறிகள் நிறைய கொண்டு வரச் சொல்லி "கைக் குழந்தை வைத்துள்ள தாய்மார்களுக்குக் கொடு" என்றார். ஜகன் மாதாவை நிகர்த்த அவரது கருணைக்கு எல்லை ஏது? அந்தக் கருணைதான் மொழி எல்லைகளை மீறி ஆந்திர மக்களை அன்பில் அடிமையாக்கியுள்ளது.

எத்தனை நாள் நமக்கு இந்தப் பாக்கியமோ என்று ஏங்கும் மனத்துடன் தினம் தினம் கிடைத்தவரை ஆனந்திப்போம் என்று கருதிப் பெரியவாளின் பூஜையைக் கண்டும், உபந்நியாசங்களைக் கேட்டும் களிக்கின்றனர் பாக்கிய நகர்வாசிகள்.

கடைசியில் ஒரு வார்த்தை. வரவேற்புக் கமிட்டியார் முயற்சி மட்டும் அல்ல இந்த வெற்றிக்குக் காரணம். அவர்களுக்கு உறுதுணையாக உள்ளூர் பஜனை ஸமாஜத்தாரும், முருக பக்தர்களும், ஆந்திர சத்சங்கங்களும், பக்தர்களும், மற்ற தொண்டர்களும் முழு மனத்துடன் தாங்களாக முன்வந்து பலவித உதவிகளை உழைப்பாகவும், பொறுப்பாகவும், பொருளாகவும், மனோவாக்கு காயம் என்றபடி இயன்றவரை நல்குகின்றனர். தங்கள் ஆபீஸ், குடும்பவேலைகளுக்கு இடையில்தான் அவர்கள் பெரியவாளுக்குக் கைங்கரியம் புரியவேண்டியிருக்கிறது. இத்தனைக்கும் அவர்கள் தினம் ஒரு முறையாவது பெரியவர்கள் அருகில் நின்று ஆர அமரத் தரிசிக்க முடியுமா என்பது சந்தேகம். ராமனைவிட ராமநாமம் பெரிது என்பது போல் பெரியவாளைப் பார்க்காமலும் பெரியவாள் சேவையை ஓடி ஓடிச் செய்யும் அவர்களுக்கு ஆண்டவனின் அவதாரமான ஆசார்யாளின் ஆசிகள் பரிபூரணமாகக் கிட்டும் என்பதில் ஐயமுண்டோ? — ஸ்ரீப்ரியா

# 5 வது ஆண்டு ஆரம்பம்!

19 64 / 68




**மயிலை**யில் பட்டுச், சேலைகளுக்கு என்றே பிரத்யேகமாக அமைக்கப்பெற்ற இந்த ஷோ-ரூமுக்கு 4 ஆண்டுகள் வெற்றிகரமாகப் பூர்த்தியாகி 17-5-68ல் 5-வது ஆண்டு துவங்கியுள்ள இத் தருணத்தில்,

● எமக்குப் பெரிதும் ஒத்துழைப்பு அளித்த வியாபாரிகளுக்கும், பேராதரவு தந்த வாடிக்கையாளர்களுக்கும் எமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

● அடுத்து, எமது ஸ்தாபனத்தில் பணியாற்றும் ஊழியர்கள் சிப்பந்திகள் அனைவருக்கும் — முக்கியமாக சேல்ஸ்மென்கள், வாடிக்கையாளர்களுக்குத் திருப்தியளிக்கும் வகையில் திறம்பட பணியாற்றியதற்கு எங்களது மனமுவந்த பாராட்டுதல் உரியனதாகும்.

● கற்பகம், இந்திரா மற்றும் சியாமளா ஆகிய 3 புதிய படைப்புகளை தங்களுக்கு அறிமுகம் செய்து, பட்டுச் சேலை தயாரிப்பில் ஓர் புதிய திருப்பத்தை — ஏன் புதிய சகாப்தத்தையே உருவாக்கியதற்கு தங்களது அமோகமான வரவேற்பும், பேராதரவுமேதான், மேலும் பல புதுப் புது கலர்களையும், நவநவமான டிசைன்களையும் தயாரிக்கத் தூண்டுகோலாக விளங்குகிறது.

● எமது சொந்தத் தறிகளில், தரமான பட்டில், உயர்ந்த ஜரிகையுடன், எமது மேற் பார்வையில் அசல் பட்டுப் புடவைகளை தயாரித்து உற்பத்தியாளர்களின் விலைக்கே வாடிக்கையாளர்களுக்கு வழங்குகிறோம்.

● எமது பணிவான, சிறந்த நல்வரவேற்பும் நியாயமான விலைகளில் தரமான அசல் பட்டுச் சேலைகளும் கிடைக்க உறுதியளிப்பதுடன் பல அவசியமான வசதிகளையும் அளிக்கிறோம்.

● தங்களது ஆதரவையும், சேவையளிக்கும் நல் வாய்ப்புக்களையும் எமக்குத் தொடர்ந்து அளிக்கக் கோருகிறோம்.

● வாடிக்கையாளர்களின் திருப்தியே எங்கள் வியாபார நோக்கு!

• • • ஈடு இணையற்ற பட்டுச் சேலைகளுக்கு • • •

# நல்லி சில்க்ஸ்

## பட்டு சேலைகள்

லஸ் • மைலாப்பூர் சென்னை-4

(போன்: 74862)

பட்டுச் சேலைகளுக்கு மட்டுமே பிரத்யேகமான ஷோ-ரூம்

பனாரஸ் புடவைகளுக்கான புதிய ஷோ-ரூம்

**நல்லி சில்க்ஸ் பனாரஸ் ஹால் ஆரம்பத்தை விரைவில் எதிர்பாருங்கள்!**

# செல்லம்மாள் பொல்லாதவள்



தலையில் குடத்தை வைத்துக் கொண்டு திருவிழாக்களில் கரகம் ஆடும் பலரை நாம் பார்த்திருக்கிறோம். இதற்கு நீண்ட காலப் பயிற்சி தேவை. தலையில் குடத்தை வைத்துக் கொண்டு சைக்கிள் விடுவது எவ்வளவு சிரமமான காரியம் என்பதை விளக்கத் தேவையில்லை. சைக்கிளையும் பாலன்ஸ் செய்து, குடத்தையும் 'பாலன்ஸ்' செய்யும் சாதனையில் ஒரு பெண் வெற்றியடைந்திருக்கிறாள்! பெண்கள் மனம் வைத்தால் எதைத்தான் சாதிக்க முடியாது!

ஆலங்குடி (புதுக்கோட்டை) அருகிலுள்ள மேட்டுப்பட்டியைச் சேர்ந்த குமாரி செல்லம்மாளுக்குக் கரக ஆட்டத்தில் பத்து வருட அநுபவ உண்டு. சைக்கிள் விடுவதிலும் கடந்த ஐந்து ஆண்டு காலத்தில் நல்ல தேர்ச்சி பெற்றுள்ளார். தலையில் குடத்தை வைத்துக் கொண்டு ஏணி மேல் ஏறுவதிலும், பார் விளையாடுவதிலும் இவருக்கு அசாதாரணமான திறமை உண்டு. சைக்கிளின் முன் சக்கரத்தின் அச்சில் இரு பாதங்களையும் ஊன்றி நின்று, ஒரு கையால் சைக்கிளின் கைப்பிடியைப் பற்றியவாறு மற்றொரு கையால் 'டாடா' சொல்வது போல் 'பாலன்ஸ்' செய்யும்போது குமாரி செல்லம்மாளின் தலையில் உள்ள குடம் ஆடாது அசையாது ஏதோ சத்தியத்துக்குக் கட்டுப்பட்டது போல் நிற்கும்! குடமும் தலையுமாகக் குமாரி செல்லம்மாள் சைக்கிள் மீது நின்று புரியும் வியத்தகு சாதனைகளைச் சாதாரணமாக சர்க்கஸ் காட்சிகளில் கூடக் கண்டிருக்க முடியாது. செல்லம்மாள் செய்யும் வித்தைகளில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை: (1) தலையில் கரகக் குடத்துடன் சோடா புட்டியின் மூடியைத் திறந்து, புட்டியைக் கையால் தொடாமலே வாயினாலேயே அதனை எடுத்து ஒரு தம்ளரில் ஊற்றிக் குடித்து விட்டுக் கீழே கிடக்கும் மூடியையும் வாயினாலேயே எடுத்துச் சோடா புட்டியின்மீது வைத்து விடுவார். தலை சுற்றுகிறதா? ஒரு சோடா குடிக்க வேண்டியது தான்! (2) கரகம் ஆடும்போது யாராவது ரசிகர்கள் கரன்ஸி நோட்டுக்களை அன்பளிப்பாகக் கீழே வீசிப் போட்டால், அந்த நோட்டைச் செல்லம்மாள் தன் கண் இமையால் எடுத்துக் கொண்டு விடுகிறார்! இச் சாதனையை நிகழ்த்தும்போது தலையில் இருக்கும் குடம் கைகளின் உதவியின்றியே மெல்ல மெல்ல நழுவிப் பின் கழுத்துக்கு வந்து நிற்குமாம்! தைரியமாக நம்புங்கள்! பொல்லாத திறமை கொண்டவர்தான் செல்லம்மாள்!

❁ கரகத்தைத் தலை
❁ யில் ஏந்திப் பல
❁ அரிய சாதனைகளைச்
❁ செய்யும் செல்லம்
❁ மாள் மிகப் பொல்
❁ லாதவள்தானே!



இருபத்து மூன்று வயதுள்ள குமாரி செல்லம்மாளின் சகோதரர் திருகருப்பையா கரக நாட்டியத்துக்குரிய பாட்டுகளை நாகஸ்வரத்தில் வாசிக்கிறார். கரக ஆட்டத்தில் தேர்ச்சி மிக்க குமாரி செல்லம்மாளின் கலையைத் தமிழகத்தில் திருவிழா நடைபெறும் இடங்களில் கண்டு மகிழ்ந்தவர் எவ்வளவோ பேர்!

—ரா. பா.

புகைப்படங்கள்: கே. ஜனார்த்தனம்



# ஆசை நிராசையான காட்சி



'நந்தலால்

நினைவிருக்கிறதா?

1945-ம் ஆண்டு மே மாதம் 3ந்தேதி சென்னை ஹைகோர்ட்டுக்குள்ளும் வெளியேயும் எள் போட்டால் கீழே விழாது என்பார்களே அதைப் போலக் கூட்டம். சினிமா வானில் புகழ்பெற்ற என். எஸ். கிருஷ்ணன், தியாகராஜ பாகவதர் கைதிக் கூண்டில் நிற்கிறார்கள். லக்ஷ்மிகாந்தம் கொலை வழக்கில் அன்று தீர்ப்பு. மாலை 4-34 மணிக்கு ஜூரிகள் தங்கள் முடிவைப்பற்றி ஆலோசிப்பதற்காகத் தங்கள் அறைக்குள் சென்றவர்கள் இரவு 7-39க்குத்தான் திரும்பி வந்தார்கள். இந்த 3 மணி நேரம் அங்கிருந்த ஜனங்கள் நெருப்பின்மீது நிற்பவர்களைப் போலவே இருந்தார்கள். பாகவதர், கிருஷ்ணன், போலீஸ் ஆறுமுகம் ஆகியவர்கள் விடுதலை செய்யப்பட்டு விடலாம் என்பதே பெரும்பாலான பொது ஜனங்களின் நம்பிக்கையாக இருந்தது. நடிகர்கள் விடுதலையை எதிர்பார்த்து மாலைகள் கொண்டு வரப்பட்டிருந்தன.

மணி ஐந்தரையாயிற்று. கோர்ட்டுக்குள் இருந்தவர்களின் முகத்தில் கவலைக்குறிகள் தோன்ற ஆரம்பித்தன. அதுவரை உற்சாகமாக இருந்த கிருஷ்ணனும் முகவாட்டமுற்றார்.

மணி ஆறரையாயிற்று. எல்லோருமே கொஞ்சம் கொஞ்சமாக நம்பிக்கையை இழக்க ஆரம்பித்தனர். சுமார் 7-30 மணிக்கு கிருஷ்ணன் வக்கீல் முன்ஷி கோர்ட்டுக்குள் வந்தார். அவர் முகத்தில் ஈயாடவில்லை. 7-39க்கு ஜூரிகள் கோர்ட்டுக்குள் நுழைந்தனர். போலீஸ் ஆறுமுகம் குற்றவாளியல்ல என்றும், பாகவதர், கிருஷ்ணன் குற்றவாளிகளே என்பது மெஜாரிட்டி முடிவு என்றும் ஜூரிகள் தலைவர் தெரிவித்தார். இதை ஏற்று பாகவதர், கிருஷ்ணன் உள்பட 6 பேருக்கு ஜன்ம தண்டனை விதிக்கப்பட்டது.

நீதிபதி மாக்கெட் தம் தீர்ப்பில் லக்ஷ்மிகாந்தம் 'இருந்தும் கெடுத்தார் செத்தும் கெடுத்தார்' என்று சொல்லி இத்தகையவர்களைக் கொன்றால் போலீஸார் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ள மாட்டார்கள் என்று நினைத்தால் அது காட்டு நாகரிகமாகும் என்றும் குறிப்பிட்டார்.

1947 ஏப்ரல் 25ந் தேதி பாகவதரும் கிருஷ்ணனும் அப்பீலில் விடுதலையடைந்தனர். அப்போது இவ்வழக்கில் சம்பந்தப்பட்டிருந்த எல்லாரும் மாறி விட்டிருந்தனர். முதல்முதலில் இவர்களுக்கு ஜாமீன் வாங்கிக் கொடுத்த நூஜண்ட் கிராண்ட் இறந்து விட்டார். வழக்கை நடத்திய அட்வகேட் ஜெனரல் ராஜமன்னார் நீதிபதியாகி விட்டார். விசாரணை செய்த நீதிபதி மாக்கெட் ரிடையராகி விட்டார். அப்பீலை விசாரித்த பிறகு பிரதம நீதிபதி ஸர் லயனல் லீச்சும் ரிடையராகி விட்டார்.



# உத்தரவாதம் உள்ளது

- குளிர்ச்சியான காற்றை அளிக்க மிகுந்த சக்தி
- முற்றிலும் ஓசையில்லாத இயக்கம்
- பொறியியல் நுட்பத்தினால் கோளாறற்ற இயக்கம்
- எப்படிக் கோணலாக வைத்தாலும் பக்கத்துக்குப் பக்கம் சமமாக ஆடிச் சுழலும் தன்மை
- இயக்கத்தை இஷ்டம்போல் கட்டுப் படுத்த சுலபமான கண்ட்ரோல்கள். இவை சோதனை செய்து பொருத்தப் பட்டவை மற்றும் பித்தானை அமுக்கி இயக்கக் கூடியவை

ராலிஃபேன்களைப் பற்றிய விவரங்கடங்கிய வண்ண வெளியீட்டை இலவசமாகப் பெற கீழ்க் காணும் கூபனை பூர்த்தி செய்து இந்த விலாசத்திற்கு அனுப்பவும்:

ராலிஸ் இந்தியா லிமிடெட், 21, ரேவலின் ஸ்ட்ரீட், பம்பாய்-1

பெயர் ..................................................

விலாசம் ..................................................

..................................................

உங்கள் அறைக்கு அணியாகத் திகழ அழகே உருவான ஃபேன் ராலிஃபேன்! இதன் கம்பி வலை, நேர்த்தியான நூதன டிசைனில் செய்யப்பட்டது. ராலிஃபேன் நான்கு கண்கவரும் வண்ணங்களில் கிடைக்கிறது: பழுப்புச் சாம்பல், நீலம், பச்சை மற்றும் தந்தம். எடுத்துச் செல்ல வசதியாக இருப்பதற்காக இதற்கு பிரத்தியேக டிசைனில் செய்யப்பட்ட கைப்பிடி உள்ளது. இன்றே எந்த ராலிஃபேன் டீலரையாவது இந்த ஒப்பற்ற மின் விசிறியை இயக்கிக் காட்டச் சொல்லுங்கள்!

## தென்றலின் குளுமையூட்டுவது

# ராலி:பேன்

ராலி குரூப்பின் தயாரிப்பு

மறவாதீர்கள்! ஒவ்வொரு ராலி ஃபேனுக்கும் 2 வருட உத்தரவாதம் அளிக்கப்படுகிறது

ராலிஃபேன் வகைகளில் உட்படுபவை: சீலிங்ஃபேன், பெடெஸ்டல் ஃபேன், வால் ஃபேன், எக்ஸாஸ்ட் ஃபேன்



## தலதா மாளிகை

கருணைக் கடலான புத்த பிரானின் புனித தந்தம் கோயில் கொண்டிருக்கும் தூய்மையான ஆலயம்தான் இந்தத் தலதா மாளிகை. வெளிநாட்டவர்களின் சிந்தைக்கு விருந்தாக ஏராளமான கலைச் செல்வங்கள் இங்குண்டு. பதினேழாம் நூற்றாண்டில் புத்த பிரானின் புனிதப் பல் கலிங்க இளவரசி ஒருத்தியின் கூந்தலுக்குள் மறைத்து வைக்கப்பட்டு இலங்கைக்குக் கொண்டு வரப்பட்டது.

பௌத்தப் பெருமக்கள் அன்றாடம் வழிபடும் இந்த ஆலயத்திலிருந்துதான் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த ஈசால பேரஹரா ஊர்வலம் கிளம்பும். இந்த ஊர்வலத்தில் புத்தரின் புனிதப் பல் தங்கப் பேழையில் வைக்கப்பட்டு யானைமீது வலம் வருகிறது. — கே. வி. எஸ். மோகன்

**இலங்கைக்**
**காட்சி - 5**




# லைப்பாய்

## இருக்குமிடம்: அதுவே...
## ஆரோக்கியம் இருக்குமிடம்

லைப்பாய் ஸ்நானம் - உற்சாகப் பெருக்கு. உல்லாச ஊற்று..
ஒவ்வொரு குளியலும் உணர்த்தும்: நல்ல சோப்புக்குரிய நன்மைகள் யாவும் பெறலாம், அதற்கு மேலும் பெறலாம் ஆரோக்கியமுடன்.

**அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக் களைவது லைப்பாய்**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

லிண்டாஸ்-L.51-1401

# அலைந்த மனம் நிலைத்தது

''என்னடா! கணக்குப் போட்டுவிட்டாயா?'' என்று கேட்டார் தந்தை.

''இல்லையப்பா! சரித்திரம் படித்துக் கொண்டிருக்கிறேன்'' என்றான் பையன்.

''இன்று கணக்குப் பரீட்சை என்று சொன்னாயே?''

''இருந்தால் என்ன, அப்பா? சரித்திரமும் முக்கியம்தானே?''

ஒருசில விநாடிகள் கழித்துத் தந்தை பார்த்தார். பையன் காகிதக் கப்பல் செய்து கொண்டிருந்தான்.

''என்னடா இது? கணக்கையும் அரை குறையாகப் போட்டிருக்கிறாய். சரித்திரப் புத்தகமும் திறந்தது திறந்தபடி கிடக்கிறது. விளையாட ஆரம்பித்து விட்டாயே!'' என்றார் தந்தை.

பையன் விஞ்ஞானப் புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு படிப்பதாக பாவனை செய்தான்.

பையன் புத்திசாலிதான். கெட்டிக்காரன் தான். எந்தக் காரியத்திலும் ஆர்வம் காட்டுவான். ஆரம்ப சூரத்தனம் என்பார்களே, அப்படி எந்தக் காரியத்தையும் உடனே தொடங்குவான். தொடங்கிய கையோடு அதை அரை குறையாகப் போட்டுவிட்டு மற்றொரு காரியத்தில் இறங்கி விடுவான். எதையும் முழுசாக முடிக்க மாட்டான். எதிலும் பிடிப்பில்லாமல் இப்படித் தாவினால் எப்படி உருப்பட முடியும்? தனயனின் நலனில் நாட்டம் கொண்ட தந்தை கவலை கொண்டார். எப்படியாவது அவனைத் திருத்த வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டார்.

ஒரு நாள் நடுப்பகல் இருக்கும். கையிலே பத்திரிகை ஒன்றை வைத்துக் கொண்டு முற்றத்து வெய்யிலுக்கு அருகில் தாழ்வாரத்தின் நிழலில் அமர்ந்து படிக்கலானார் தந்தை. அவருடைய ஒரு கையிலே பூதக் கண்ணாடி இருந்தது. அதை வரிகளின் மேல் ஒட்டிப் படித்துக் கொண்டிருந்தார். காரணம், பூதக்கண்ணாடி சிறிய எழுத்தைப் பெரிதாகக் காட்டியது. அதனால் படிப்பது வெகு சுலபமாக இருந்தது.

அப்பொழுது அவருடைய பிள்ளை கூடத்தில் ஏதோ கொட்டம் அடித்துக்கொண்டிருந்தான். அவன் மனம் எதிலும் நிலை கொள்ளாமல் அலை பாய்ந்து கொண்டிருந்தது. அதைக் கவனித்த தந்தை, ''ராமா! இங்கே வா!'' என்றார்.

''ஏனப்பா!'' என்று கேட்டுக் கொண்டே தந்தையின் அருகில் வந்தான் பையன்.



ஸ்ரீ சி. வி. ராமன்

''இதோ பார்!'' என்று கூறிப் பத்திரிகையை வெய்யிலில் வைத்துக் கையிலிருந்த பூதக் கண்ணாடியை அதன்மீது இப்படியும் அப்படியும் அசைத்தார் தந்தை.

சிறிது நேரம் அதைப் பார்த்துக் கொண்டிருந்த பையனுக்கு அலுத்துப் போய்விட்டது. ''போ, அப்பா! அது என்ன உருப்படாத வேலை?'' என்று சொல்லி எழுந்தான்.

''உட்காரு, அவசரப்படாதே!'' என்று சொல்லித் தந்தை கண்ணாடியைக்காகிதத்தின் ஒரு பகுதியிலே நிலையாக நிறுத்தினார். சூரிய கிரணம் அதன் வழியே பேப்பரில் பாய்ந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே காகிதத்தில் ஒரு துவாரம் விழுந்தது.

பையனுக்கு ஒரே ஆச்சரியம்! ''எப்படி அப்பா இதில் இப்படி ஓர் ஓட்டை விழுந்தது?'' என்று கேட்டான்.

''எப்படியா? நான் காகிதத்தின் மேல் இங்கும் அங்கும் கண்ணாடியை ஓட்டியபோது சூரியனின் சக்தி ஒரே இடத்தில் நிலைக்கவில்லை. நான் ஒரே இடத்தில் கண்ணாடியைப் பிடித்ததும் அதன் சக்தி வேலை செய்தது. அந்த இடத்தில் ஒரு துவாரத்தை உண்டு பண்ணி விட்டது. அதே போல் நீயும் உன் மனத்தை அலைபாய விடாமல் ஒருமைப் படுத்திச் செயல் புரிந்தால் எந்தக் காரியத்தையும் திருந்தச் செய்ய முடியும். பிறர் பார்த்து மெச்சும்படியும் செய்ய முடியும். ஆனால் உன் மனசுதான் கிளைக்குக் கிளை தாவும் குரங்காக இருக்கிறதே!'' என்றார் தந்தை, ''இல்லாவிட்டால் இப்படியெல்லாம் கொட்டம் அடித்து உன் கூரிய அறிவை வீணாக்க முயல்வாயா?'' என்று கேட்டார்.

தந்தையின் அந்தச் சொல் பையனின் மனத்தில் நன்றாக வேலை செய்தது. அன்று முதல் செய்யும் காரியங்கள் அனைத்தையும் மனம் ஒன்றிச் செய்யலானான். அதன் பயனாக, எடுத்த காரியம் யாவினும் வெற்றியும் கண்டான்.

'அந்தப் பையன் யார்?' என்று கேட்டு அதற்குப் பதில் சொன்னால்தான் இனம் கண்டு கொள்ள முடியுமா, அந்த மாபெரும் விஞ்ஞானியை? உலகம் புகழும் விஞ்ஞானியாக, பாரதத்துக்குப் புகழ் சேர்க்கும் பேரறிவாளராகத் திகழும் ஸ்ரீ சி. வி. ராமன் அவர்கள் மனத்தை ஒருமைப் படுத்திப் பல அரிய விஞ்ஞான உண்மைகளைக் கண்டுபிடித்து விஞ்ஞான உலகில் பாரதத்தின் தனித்தன்மையை நிலை நாட்டுகிறார் என்றால் அதற்குக் காரணம் அவர் தந்தை சிறு பிராயத்தில் அவருக்கு அளித்த அறிவுரையாகவே இருக்கலாமல்லவா? —ரா. வீ.



# துருவங்கள் சேர்ந்தால்...

**ஆல் இந்தியா ரேடியோ, சென்னை வானொலி நிலையம்.**

**பிராந்தியச் செய்திகள்.**

**வாசிப்பது-நீங்கள் எதிர்பார்க்காத வகையில் இன்று — நாகேஷ்**

**சென்னை நகரப் போக்குவரத்துப் பெருந்தொந்திகளில் — மன்னிக்கவும் — பெருந்திகளில் பணியாற்ற வரும் டிரைவர்கள், கண்டக்டர்களின் வயதின் வரம்பை உயர்த்தி விருப்பதாகப் போக்குவரத்துத் துறை அமைச்சர் கருணாநிதி இன்று நிருபர்கள் கூட்டத்தில் அறிவித்தார்.**

**இப்போது பதினெட்டு வயதானவர்கள் மாத்திரமே கண்டக்டர் டிரைவர் வேலைகளுக்கு மனுப் போடலாம் என்றிருந்ததை, கண்டக்டர் பதவிக்கு இருபத்தைந்து வயதாகியிருக்க வேண்டும் என்றும் டிரைவர் பதவிக்கு இருபத்தெட்டு வயதாகியிருக்க வேண்டும் என்றும் அரசாங்கம் நிர்ணயித்திருக்கிறது. ஓரளவு அறிவு முதிர்ச்சியும், அனுபவ முதிர்ச்சியும் உள்ள தொழிலாளர்கள் மக்களுக்கு நல்ல முறையில் சேவை செய்யலாம் என்று நம்பப்படுகிறது.**

ரொம்பக் கரெக்ட்! இப்போதெல்லாம் கண்டக்டருக்கும் காலேஜ் ஸ்டூடண்டுக்கும் வித்தியாசம் தெரிய மாட்டேனென்கிறது. இந்த உத்தரவு ஒரு வேளை வித்தியாசத்தை உண்டாக்கலாம். தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்குத் தீவிரப் பயிற்சி வேறு கொடுக்கப் போகிறார்களாம். நல்ல ஐடியா. ஆனால், அவர்களை ஓட்டுநர் பயிற்சிப் பேருந்தியில் மாத்திரம் அமர்த்திப் பயிற்சி கொடுக்கக் கூடாது. நாலு மாத காலம் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களைப் பிரயாணிகளாகவும், பல பஸ்களில் சுற்றிவரப் பயிற்சி கொடுக்க வேண்டும். அப்போதுதானே அவர்கள் செவிகளில் டபுள் விசில் சத்தம் சகிக்க முடியாமல் இருக்கும்! 'ஸ்டாப் ஸ்கிப்பிங்' சங்கடத்தை உண்டாக்கும்! பொதுஜனங்களோட எரிச்சலைப் புரிஞ்சுக்கிட்டு நடந்தா அப்புறம் புகாருக்கு இடமிருக்காதே!

**என். ஜி. ஓ.க்களுக்குத் திருமணக் கடனாக இரண்டாயிரம் ரூபாய் கொடுக்கும் விஷயம் பற்றி அரசாங்கம் சீக்கிரமே ஒரு முடிவுக்கு வரலாம் என்று எதிர்பார்க்கப் படுகிறது.**

ரொம்ப நல்ல விஷயம்! உடனடியாகச் செய்தாக வேண்டிய விஷயம்! இதனால் சர்க்காருக்குப் பல விஷயங்களில் லாபம் ஏற்படும். முதல் தேதிக்குச் சம்பளப் பட்டியல் தாள்கள் மாத்திரம் தயார் பண்ணி வைத்துக் கொண்டால் போதும். பாங்கியிலிருந்தோ, கஜானாவிலிருந்தோ பணத்தை எண்ணி, வாங்கி, எண்ணிக் கொடுத்து விநியோகம் செய்ய வேண்டும் என்ற தொந்தரவே இருக்காது. ஏற்கனவே அவர்கள் பிராவிடெண்ட் பண்டு கடன், கோவாபரேட்டிவ் பாங்கிக் கடன், பண்டிகை அட்வான்ஸ், வீடு கட்டற கடன் என்று வாங்கித் தள்ளிவிட்டு முதல் தேதியன்று காப்பி டிபன் செலவுக்கு அரசாங்கத்திடம் கொஞ்சம் சில்லறையை மிச்சம் வைத்திருப்பார்கள். இந்தக் கல்யாணக் கடனையும் கொடுத்துவிட்டால், அந்தச் சில்லறை கொடுப்பதையும் கணக்கிலேயே அட்ஜஸ்ட் செய்துவிட்டுக் கையை விரித்து விடலாம்! வொண்டர்ஃபுல் ஐடியா!...சீக்கிரமே நடைமுறைக்கு வரட்டும்!

**கூவம் நதி அபிவிருத்தித் திட்டத்துக்காக ஒரு பிரதம இஞ்சினியர் பதவியையும் இரண்டு உதவி இன்ஜினீயர்கள் பதவியையும் தோற்றுவிக்க அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது.**

பேஷ் பேஷ்! வருங்காலச் சந்ததிகளில் சிலர் "டு யூ நோ? எங்க தாத்தாதான் கூவம் ரீக்ளமேஷனை நிறுவி முடித்தவர்!........ டு யூ நோ? எங்க மாமாவுக்கு மாமனார்தான் கூவத்தில் ஸ்டீம் போட் சர்வீஸ் ஓட்ட வழி காண்பித்தவர்" என்று பெருமையாகப் பேசிக் கொள்ளலாம், மேட்டூர் டாம் கட்டியவரின் பேரன், துங்கபத்திரா அணைக்குத் தாண் நிறுத்தியவரின் மாப்பிள்ளை என்று பெருமைப் பட்டுக் கொள்பவர்களைப் போல. இந்தப் போட்டியைச் சமாளிக்க இப்போதிருந்தே தயார் செய்து கொள்ள வேண்டியதுதான். கரிகால சோழன்மாதிரி கூவம் வடிகால சோழன் தோன்றலாம். என்ன, ரைட்டுதானே நான் சொல்றது?

**வங்காளத்திலிருந்து வரவிருக்கும் யாத்திரிகர்களை வரவேற்க அதிகாலை நாலரை**

மணிக்கே தஞ்சாவூர் ரயில் நிலையத்துக்கு வந்த சில ரெவின்யூ அதிகாரிகள், காலை சுமார் பத்தரை மணிவரை காத்திருந்து மகாராஷ்டிர யாத்ரீகக் கோஷ்டிக்கு வரவேற்புக் கொடுத்துத் தவறுதலைத் தாமதமாக உணர்ந்தார்கள்.

நல்லவர்களை 'இமிடேட்' பண்ணலாம். ஆனால் 'கவுண்டர்பீட்' பண்ணக் கூடாதுன்னு ஒரு டயலாக் உண்டு. மகாராஷ்டிரக்காரர்கள் ரொம்பக் கொடுத்து வைத்தவர்கள். அவர்களை அறியாமலே வங்காளிகள் போல இமிடேட் செய்தார்கள். உபசாரத்துக்குப் பாத்திரமானார்கள். வங்காள யாத்திரைக் கோஷ்டி வரப் போகிறது என்று அவர்களுக்குத் தெரியாது. வங்காள யாத்திரைக் கோஷ்டி புறப்படவே இல்லை என்று ரெவின்யூ அதிகாரிகளுக்குத் தெரியாது. வேளை வந்தா எதுவும் நடக்கும்னு சொல்லுவாங்க! மகாராஷ்டிரக் கோஷ்டி வந்த வேளை நல்ல வேளை!

மதுரையிலே வருடா வருடம் சித்திரைத் திருநாள் குறிப்பிட்ட தினத்திலேதான் நடக்கும். குறிப்பிடாமல் திடீரென்று நடக்கும் திருநாள் இந்தப் பள்ளிக்கூடங்கள் இடிந்து விழுவதுதான். இந்தப் பள்ளிக்கூடத்துக்கு 'மனித மித்ரா' பட்டத்தை அளிக்க நான் சிபாரிசு செய்கிறேன். ஏன் தெரியுமா? இரவு ஏழு மணிக்குச் சிறுவர் சிறுமியர் இல்லாத நேரமாகப் பார்த்து விழுந்திருக்கிறது!

சைதாப்பேட்டைக்கு அருகே வடநாட்டுக்காரரைக் காரில் கடத்திப் போய்க் கொள்ளையடித்த நபர்களில் மூவரைப் போலீஸார் பிடித்து விட்டார்கள். இப்படிச் சுலபமாக அகப்படுவோம்னு தெரிஞ்சா, அவங்க காரை உபயோகப்படுத்தியிருக்க மாட்டாங்க! கட்டை வண்டியிலோ ரிக்ஷாவிலோ கொள்ளையை நடத்தியிருப்பார்கள். ஒருவர் கத்தி கொண்டு மிரட்டினாராம். கத்திக்கிட்டே மிரட்டினா அக்கம் பக்கம் சத்தம் கேட்காது? சுத்த அமெச்சூர்கள்!

திரைப்பட விசிறிகள் சங்கப் பட்டியலில் 1967ல் வெளியான படங்களில் திரைப்பட நடிகர் நாகேஷ் 'அனுபவி ராஜா அனுபவி' படத்தில் சிறப்பாக நடித்ததை முன்னிட்டுச் சிறந்த நகைச்சுவை நடிகராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். இந்த மனிதருக்கு நன்றாக வேண்டும். புகழை அனுபவிச்சுப் பார்த்தால் தானே அதன் கஷ்டம் தெரியும்! சும்மா அனுபவிக்கட்டும்!

ராமநாதன் கிருஷ்ணன் மீண்டும் விம்பிள்டன் பந்தயங்களில் கலந்து கொள்ள முன்வந்ததை டென்னிஸ் உலகமே வரவேற்கிறது.

ஆமாம்! அவங்க ரொம்ப நல்லவங்க! பரந்த மனசு உள்ளவங்க. சினிமா உலகத்திலே இப்படி ஓர் ஆசாமி மறுபடியும் வர விடுவாங்களா? கபாடி ஆட்டத்திலே அமுக்கற மாதிரி அமுக்கி அவனை எழுந்திருக்க விடாமல் ஆக்கிட மாட்டாங்களா? டென்னிஸ் டென்னிஸ்தான்!

செய்திகளின் சாரம்!... என்னத்துக்கு மறுபடியும்! அதுதான் தேவையான அளவுக்குப் போரடிச்சுட்டேனே! இன்னொரு முக்கிய விஷயம். சொல்லியாகணும். மின்சாரத் தடை காரணமாக ஆறு மணி பதினொரு நிமிடம் பத்து விநாடிகளிலிருந்து ஆறு மணி பதினாறு நிமிடம் இருபது விநாடி வரை ஒலிபரப்புத் தடைப்பட்டதற்கு மன்னிக்க வேண்டுகிறோம்!

நீங்க கொடுத்து வச்சவங்க! பாதிப் பேச்சைக் கேட்காமல் தப்பிச்சுட்டீங்க! நான்தான் செய்தி அறிக்கை முழுவதையும் படிக்க முடிச்சேன். — **கோமதி சுவாமிநாதன்**

---

## எப்படி இருக்கு?








# பால்குடம்

உயர் நீதி மன்றத்து நீதிபதியின் மூத்த மகன் கண்ணன். செல்வத்துக்குக் குறை வில்லை. ஆனால் சின்னஞ் சிறு வயதிலிருந்தே திருட்டுக் குணம் அவனிடம் எப்படியோ படிந்து விட்டது. பெரியவனான பிறகும் அந்தக் குணம் சிறிதும் மாறவில்லை. தாயார், தகப்பனார், தம்பி எல்லோரும் இடித்துக் கூறியும் அவன் சிறிதும் திருந்தவில்லை; கண்ணனுக்குக் கல்யாணம் செய்து வைத்து விட்டால் மனைவியின்மூலம் அவனைத் திருத்திவிடலாம் என்று டாக்டர் ஒருவர் சொல்கிறார். கண்ணனின் பெற்றோருக்கு இது ஒரு புதிய வேதனை. திருட்டுக் கண்ணனை எந்தப் பெண் மணந்து கொள்வாள்? அவனையும் விரும்பி மணந்து கொள்ள ஒரு பெண் முன்வரத்தான் செய்கிறாள். அவள்தான் கஸ்தூரி; நீதிபதியின் வீட்டில் வளர்ந்து வருபவள். கஸ்தூரி கண்ணனின் வாழ்க்கையையே திருத்திவிடுகிறாள். ஏ.வி.எம். ராஜன் தான் கண்ணனாக நடிக்கத் தகுந்தவர் என்பதை ஒவ்வொரு கட்டத்திலும் அநாயாசமாக நிரூபித்தார். ''ஒவ்வொரு சமயமும் நான் திருடக் கூடாது என்றுதான் நினைக்கிறேன். ஆனால் எப்படியோ என்னையும் அறியாமல் திருடி விடுகிறேன்...'' என்று குழந்தைமாதிரி அவர் கூறியது உருக்கமாக இருந்தது. ''அப்பாவுக்குப் பிறகு நான்தானே இந்த வீட்டுக்குப் பெரிய மனிதன்!'' என்று சொல்லிக்கொண்டு கண்ணன் தன் தம்பிக்குக் கல்யாணம் நிச்சயம் செய்யப்போன காட்சி நாடகத்திலே நடுநாயகமாக நின்றது. மிக இயல்பான ஜீவகளை மிக்க நடிப்பு.

கஸ்தூரியாக நடித்த புஷ்பலதா இளம் பெண்ணாகத் துள்ளிக் குதித்தபோதும் சரி, கண்ணனை மணந்துகொண்டு, கண்ணீர் விட்ட போதும் சரி, அவர் நடிப்பில் துடிப்பும் துருதுருப்பும் இருந்தன; என்னதான் கண்ணன் திருடினாலும் பொய் மட்டும் சொல்வதில்லை என்பதில் கஸ்தூரி அடைந்த பெருமிதமும், கடைசியில் கண்ணன் திருந்திவிட்டதில் அவள் அடைந்த மகிழ்ச்சியும் புஷ்பலதாவின் முகத்தில் அற்புதமாக வெளிப்பட்டன.

நீதிபதியாக வந்த சேஷாத்திரி நிதானமாகவும், கம்பீரமாகவும் நடித்தார்.

டைப்பிஸ்ட் கோபுவும் ஸைமனும் சேர்ந்து தரமான நகைச்சுவை விருந்தளித்தனர்.

நீதிபதியின் நண்பர் ராமநாதனாக நடித்த பாஸ்கர், கண்ணனின் தம்பி ரவியாக நடித்த பிரபு, ரவியின் மனைவி வனஜாவாகத் தோன்றிய விஜயமாலா ஆகியோர் பாத்திரத்தை உணர்ந்து சிறப்பாக நடித்தனர். ''பால் குடம்'' சுவையான நாடகம்; புதுமையான படைப்பு. இதை எழுதியவர் தூயவன்.

## கிங்குக்கு அஞ்சலி

மகாத்மா காந்தியடிகளின் அறவழிப் போராட்டத்தையும், அறநெறி வாழ்க்கையையும் பின்பற்றி காந்தியடிகளைப் போலவே ஓர் அந்தகனின் குண்டுக்கு இரையாகி அமரருலகு எய்திய டாக்டர் லூதர் கிங் என்ற நீக்ரோ தலைவரைப் பற்றிய செய்திச் சுருளைச் சமீபத்தில் சென்னையில் உள்ள அமெரிக்க செய்தி ஸ்தாபனத்தார் காண்பித்தார்கள். அதற்குமுன் காந்தி அடிகளின் வாழ்க்கையிலிருந்து சில முக்கியமான சம்பவங்கள் கொண்ட செய்திச் சுருளையும் காண்பித்தார்கள். இந்த இரண்டு செய்திச் சுருளையும் பார்த்தவர்கள், சத்தியம், தர்மம், ஒழுக்கம்-இவை செல்லாக் காசாகிவிடவில்லை என்ற புது நம்பிக்கை பெற்றுத் திரும்பியிருப்பார்கள்.

காந்தியடிகள் தமக்கு அணிவிக்கப்பட்ட கதர் மாலையை ஒரு குழந்தைக்குச் சேர்த்து அணிவித்துக் குலவும் காட்சி, பிரிட்டனில் செய்தி நிருபரின் வாயைப் பொத்தும் காட்சி, தண்டி யாத்திரை, நவகாளி யாத்திரை — ஆகியவை மனத்தை விட்டு அகலாக் காட்சிகள். கிங்கின், ''நான் ஒரு கனவு கண்டேன்.....'' என்ற பிரசங்கமும், ஜனதிபதி ஜான்ஸன், ராபர்ட் கென்னடி, பல நகர மேயர்கள் — ஆகியோரின் இறுதி மரியாதை உரைகளும், கிங்கின் இறுதி யாத்திரையும், வெள்ளையரும் கறுப்பரும் கண்ணீரில் கலந்து நின்ற காட்சிகளும் உள்ளத்தை உருக்கும் காட்சிகளாகும்.

# கண்ணன் என் காதலன்

புரட்சி நடிகரின் படங்களிலேயே இது முற்றிலும் மாறுபட்ட கதையமைப்பைக் கொண்டது. எம்.ஜி.ஆர். படங்களில் சிக்கலான பிரச்னைகள், இதயத்தைக் 'கசக்கிப் பிழிந்தெடுக்கும் வேதனைகள், இவைகளுக்கெல்லாம் இடம் இருக்காது. அப்படி ஏதாவது இருந்தாலும் அவை இடைவேளைக்குள் தீர்ந்துவிடும். ஆனால் இந்தப் படத்தில் அப்படியில்லை. எம்.ஜி. ஆருக்கே ! மசியாத பல சிக்கல்கள் உருவாகின்றன! பியானோ கண்ணன் காதலித்தது ஒருத்தியை; ஆனால் கைப்பிடித்ததோ வேறு ஒருத்தியை!

மல்லிகா தான் தாய்மைப் பேற்றை அடைந்து! விட்டதாகக் காணும் கனவுக் காட்சி பிரமாதமாகப் படமாக்கப்பட்டிருக்கிறது. 'சிக்' உடை சிங்காரியாகத் தோன்றியே பழகிவிட்ட ஜயலலிதாவுக்குக் கண்ணீர் விட்டுக் கலங்கி, தற்கொலைக்கு முயன்று இறுதியில் வில்லனின் துப்பாக்கிக்கு இரையாகும் பாகம் முற்றிலும் புதியது. மல்லிகா, மாலதியிடம் ''கண்ணன் என் காதலன் மட்டும்தான்; ஆனால் அவர் உனக்குத்தான் கணவர்...!'' என்று கூறி உயிர் துறந்தபோது அந்தப் பாத்திரம் உயிர் பெற்று விடுகிறது! சபாஷ்! ஜயலலிதாகூடச் சோகமாய் நடிக்கிறாரே!

குதித்துக் குதித்துப் பியானோ வாசிக்கும் கண்ணன், மாலதியைக் கட்டிப் பிடித்துக் களியாட்டம் போடும் கண்ணன், ஆருயிர்க் காதலியைக் கைவிடுவதா, ஊனமுற்ற பெண்ணுக்கு வாழ்வளிப்பதா, அவள் தந்தைக்கு அளித்த வாக்குறுதியைக் கைவிடுவதா என்ற பிரச்னையில் தவித்த கண்ணன் - ஆகிய எல்லாத் தோற்றங்களிலும் என்றும் குன்றாத இளமையுடன் எம். ஜி. ஆர். தமக்கே உரிய தனிப் பாணியில் நடித்திருக்கிறார்.

கவர்ச்சிக் கன்னி வாணிஸ்ரீ ரப்பர்ப் பந்து போல் துள்ளிக் குதித்துக் காதல் காட்சியில் ஒட்டி உரசி நடிக்கிறார். 'இத்தனை நெருக்கம் தேவையா?' என்று கேட்டுக்கேட்டு அலுத்துவிட்டது. வாணிஸ்ரீ புரட்சி நடிகருடன் இணைந்து நடித்து விட்டார்! இனி அதிர்ஷ்டம் வரக் கேட்பானேன்!

பட்டாபியாக வரும் 'சோ' வரும்போதெல்லாம் சிரிப்பும் கூடவே வருகிறது. இவர் போதாக் குறைக்கு, சந்திரபாபு வேறு வந்து அமர்க்களப்படுத்துகிறார்.

''பாடுவோர் பாடினால்'', ''கண்களிரண்டும் விடிவிளக்காக'' என்ற பாடல்கள் நன்றாயிருக்கின்றன. வித்வான் லட்சமணனும், நா. பாண்டுரங்கனும் சுவையாக வசனம் தீட்டியிருக்கிறார்கள்.

''கண்ணன் என் காதலன்'' பாரதியின் கவர்ச்சியான தலைப்பு — அதற்கேற்றபடி எல்லா விதத்திலும் கவர்ச்சி மிகுந்த பொழுதுபோக்குப் படம்.



# மகாபாரதம்

ராஜாஜி

"அறிவாளியான விதுரன் தருமத்துக்கும் ராஜ நீதிக்கும் ஒத்த சொல்லைச் சொன்னான். நான் அதைக் கேட்கவில்லை. மூட மகனுடைய விருப்பத்தை அநுசரித்தேன். நாம் ஏமாந்தோம்" என்றான் திருதராஷ்டிரன். அடிக்கொரு தரம் விதுரன் திருதராஷ்டிரனை வற்புறுத்துவான். "உம்முடைய மகன் பெரும் பாவம் செய்தான். தருமபுத்திரன் வஞ்சிக்கப்பட்டான். உம்முடைய குமாரர்களைக் கெட்ட வழியிலிருந்து திருப்புவது உம்முடைய கடமையல்லவா? உம்மால் கொடுக்கப்பட்ட ராஜ்யத்தை பாண்டு புத்திரர்கள் மறுபடியும் அடைந்து அநுபவிக்க நீர் ஏற்பாடு செய்ய வேண்டும். யுதிஷ்டிரனை வனத்திலிருந்து திரும்பி வரச் செய்து சமாதானம் செய்யும். துரியோதனன் உம்முடைய ஆலோசனையைக் கேட்காவிட்டால் அவனை அடக்க வேண்டும்" என்று விதுரன் பல தடவை திருதராஷ்டிரனுக்குச் சொன்னான்.

முதலில் இவ்வாறு சொல்லும்போது திருதராஷ்டிரன் சும்மா கேட்டுக் கொண்டிருப்பான். விதுரனுடைய அறிவு மேலானது என்று திருதராஷ்டிரனுக்கு அவனிடத்தில் பூரண மதிப்பு. ஆனால், வர வரப் பொறுமையை இழந்தான்.

ஒரு நாள், "விதுரனே! நீ எப்போதும் பாண்டவர்களைப் பற்றிச் சாதகமாகவும், என் மக்களைப் பற்றி விரோதமாகவுமே பேசுகிறாய். நீ எனக்குச் சத்ருவென்றே தோன்றுகிறது. எங்கள் நன்மையை நீ விரும்பவில்லை. துரியோதனன் என் தேகத்திலிருந்து உண்டானவன். அவனை நான் எவ்வாறு விட்டுவிட முடியும்? நியாயமில்லாமலும் இயற்கைக்கு விரோதமாகவும் யோசனை சொல்லுவதில் என்ன பயன்? இனி நான் உன்னை நம்ப முடியாது. நீ எனக்கு இனிமேல் வேண்டியதில்லை. உனக்கு இஷ்டமானால் பாண்டவர்கள் இருக்குமிடம் நீயும் போகலாம்" என்று கோபமாகச் சொல்லிவிட்டு விதுரனுடைய மறுமொழிக்குக்கூடக் காத்திராமல் திருதராஷ்டிரன் அந்தப்புரம் போய் விட்டான்.

இவ்வாறு சொல்லப்பட்ட விதுரன், "இனி இந்தக் குலம் நாசமே" என்று தீர்மானித்துக் கொண்டு வேகமான குதிரைகள் பூட்டிய ரதத்தில் ஏறிப் பாண்டவர்கள் இருந்த வனத்துக்குச் சென்றான்.

ஃ ஃ ஃ

விதுரன் நகரத்தை விட்டுப் போனதும், திருதராஷ்டிரன் மறுபடியும் கவலை அடைந்தான். "என்ன செய்தேன்! பாண்டவர்களுடைய பலத்தை இன்னும் அதிகரித்து விடும்படியான வழியைத் தேடினேனே! விதுரனைத் துரத்தியது பெரும் தவறு" என்று நினைத்துச் சஞ்சயனைக் கூப்பிட்டு, "சஞ்சயனே! நான் என் பிரிய சகோதரன் விதுரனைத் தகாத சொல் சொல்லி விட்டேன். அவன் கோபம் கொண்டு வனம் சென்றுவிட்டான். நீ உடனே போய் விதுரனைக் கண்டு எப்படியாவது சமாதானம் சொல்லி அழைத்து வா!" என்றான்.

சஞ்சயன் விரைவாகச் சென்று வனத்தில் பாண்டவர்கள் இருந்த ஆசிரமத்தை அடைந்தான். பாண்டவர்கள் மான் தோல் உடுத்தி, ரிஷிகளுடன் இருந்ததைப் பார்த்தான். அவ்விடம் விதுரன் இருப்பதையும் கண்டான். தான் செய்த குற்றத்துக்குத் திருதராஷ்டிரன் பச்சாத்தாபப்படுவதைத் தெரிவித்தான்.

"நீ திரும்பாமற் போனால் திருதராஷ்டிரன் உயிர் நீப்பான். சீக்கிரம் பாண்டவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு அரசன் சபையைச் சேருவீராக" என்று வணக்கமாகச் சஞ்சயன் சொன்னான்.

இந்தச் செய்தியைக் கேட்டதும் விதுரன், யுதிஷ்டிரனிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டு ஹஸ்தினாபுரம் திரும்பி அடைந்தான்.

திருதராஷ்டிரனும் விதுரனைக் கட்டித் தழுவிக் கொண்டு, "குற்றமற்றவனே! என்னால் அவசரத்தில் சொல்லப்பட்ட

பேச்சை நீ பொறுத்துக் கொள்ள வேண்டும்'' என்று அழுகுரலில் சொன்னார்.

ஃ ஃ ஃ

ஒரு நாள் மைத்ரேய ரிஷி திருதராஷ்டிரன் சபைக்கு வந்தார். அரசன் ரிஷியை வணங்கி வரவேற்றான்.

''பகவானே! வீரர்களும் எனக்குப் பிரியமான மக்களுமான பாண்டவர்களைக் குருஜாங்குலத்தில் கண்டீரே, அவர்கள் சுகமா? வனத்திலேயே இருக்க விரும்புகிறார்களா? நம்முடைய குலத்தில் சிநேகம் குறைவடையாமல் இருக்குமா? ஆசீர்வதிக்க வேண்டும்'' என்று திருதராஷ்டிரன் முனிவரைக் கேட்டான்.

மைத்ரேயர், ''காம்யக வனத்தில் தற்செயலாகத் தருமபுத்திரரைப் பார்த்தேன். வனத்திலுள்ள ரிஷிகளும் அவரைப் பார்க்க வந்திருந்தார்கள். அப்போது ஹஸ்தினாபுரத்தில் நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் சொல்லக் கேட்டேன். அதனால்தான் நான் இவ்விடம் வந்தேன். நீரும் பீஷ்மரும் உயிருடன் இருக்கும்பொழுது இவ்வாறு நடந்தது யோக்கியமன்று'' என்றார்.

பிறகு, மைத்ரேயர் சபையிலிருந்த துரியோதனனைப் பார்த்து, ''ராஜகுமாரனே! உனக்கு நன்மையைச் சொல்லுகிறேன். பாண்டவர்களை மோசம் செய்யப் பார்க்க வேண்டாம். அவர்கள் சூரர்கள். கிருஷ்ணனுக்கும் துருபதனுக்கும் பந்துக்கள். அவர்களை விரோதம் செய்துகொள்ள வேண்டாம். சமாதானம் செய்துகொள்'' என்றார்.

இவ்வாறு ரிஷி சொன்னபோது, பிடிவாதக்காரனும் மூடனுமான துரியோதனன் தன் துடையைக் கையால் தட்டிப் புன்னகை புரிந்து பூமியைக் காலால் கீறிக்கொண்டு ஒன்றும் சொல்லாமல் வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக்கொண்டு நின்றான்.





மைத்ரேயர் கோபங்கொண்டு, துரியோதனனைப் பார்த்து, ''இந்தக் கர்வத்தின் பயங்கரப் பலனை நிச்சயமாக அடைவாய். பீமனுடைய கதையால், உன் துடை பிளக்கப்பட்டு யுத்தத்தில் மாள்வாய்'' என்றார். திருதராஷ்டிரன் துள்ளி எழுந்து ரிஷியின் காலில் விழுந்தான். ''சபிக்காதீர்! பகவானே!'' என்றான்.

மைத்ரேயர், ''அரசனே! உன் புத்திரன் சமாதானம் அடைந்தால் என் சாபத்தின் பயன் உண்டாகாது. இல்லாவிடில் உண்டாகும்'' என்று சொல்லி எழுந்து சபையினின்று வெளியேறினார்.

மகாபாரதம் புராணக் கதை. தற்காலத்திலும்கூடப் பெரிய பதவியில் இருப்பவர்களையும், சாதாரண உலக வாழ்க்கையில் இருப்பவர்களையும் க்ஷாத்திர எண்ணங்கள் தூண்டும். அப்போது இந்த அத்தியாயத்தைப் படித்தால் அறிவு உண்டாகும். பெரும் பிழையினின்று தப்பலாம்.

# 28. கிருஷ்ணன் பிரதிக்ஞை

சிசுபாலனைக் கிருஷ்ணன் கொன்றுவிட்டான் என்ற செய்தி அவனுடைய நண்பன் சால்வனுக்கு எட்டியதும் அவன் மிகுந்த கோபம் கொண்டு பெரும் படையைக் கூட்டிக் கொண்டு துவாரகையை முற்றுகையிட்டான். அப்போது கிருஷ்ணன் இன்னும் நகரத்துக்குத் திரும்பவில்லை. கிருஷ்ணன் இல்லாத சமயத்தில் துவாரகையை உக்கிரசேனன் காவல் காத்தான். பாரதத்தில் முற்றுகையைப் பற்றிப் படிக்கும்போது தற்கால யுத்த நடவடிக்கைகள் போலவே எல்லாம் காணப்படுகிறது. துவாரகை என்பது ஒரு தீவில் கட்டப்பட்ட கோட்டை. அதில் சகல விதக் காப்புக்களும் நன்றாக நிர்மாணிக்கப் பட்டிருந்தன. பல்லாயிரக் கணக்கான போர்வீரர்கள் இருப்பதற்குத் தகுந்த இடங்களும், யந்திரங்களும், சுரங்க வழிகளும் அமைக்கப்பட்டிருந்தன. பலவித ஆயுதங்களும், கவண் கற்களை எறிகின்ற பொறிகள், வெடி மருந்து உள்பட எல்லாம் சேகரித்து வைக்கப்பட்டிருந்தன. புகழ்பெற்ற வீரர்களின் பெருங்கூட்டம் நகரத்துக்குள் இருந்தது. முற்றுகையிடப்பட்ட காலத்தில் யாரும் கள் குடிக்கக் கூடாது என்ற உக்கிரசேனனுடைய கண்டிப்பான உத்தரவு முரசு அறைந்து பகிரங்கப்படுத்தப் பட்டது. நகரத்திலிருந்து நர்த்தனம் செய்கிறவர்களையும் மற்ற வேடிக்கை ஆட்டக்காரர்களையும் அப்புறப்படுத்தி விட்டனர். ஜலத்தைத் தாண்டி வரும் எல்லாப் பாலங்களும் உடைத்து விடப்பட்டன. கப்பல்கள் தடுக்கப்பட்டன. அகழிகளில் ஜலத்துக்குள் இரும்புச் சூலங்கள் நடப்பட்டன. மதில்கள் எல்லாம் பழுது பார்க்கப்பட்டன. வழிகள் எல்லாம் இரும்பு முள் கம்பிகள் நடப்பட்டுத் தடுக்கப்பட்டன.

இயற்கையாகவே பிரவேசிப்பதற்குக் கடினமாக இருந்த நகரத்துக்குச் சால்வன் முற்றுகையிட்டகாலத்தில் இன்னும் அதிகக் கடினமான பந்தோபஸ்துகள் செய்யப்பட்டன. நகரத்திலிருந்து யாரும் முத்திரையிட்ட ஆதாரச் சீட்டின்றி வெளியே போகாமல் தடுக்கப்பட்டார்கள். அவ்வாறே நகரத்துள் பிரவேசிப்பதற்கும் கடுமையான உத்தரவு. சேனைகளுக்கெல்லாம் சம்பளம் உயர்த்தப்பட்டது. கொடுக்க வேண்டிய ஊதியங்கள் எல்லோருக்கும் தாமதமின்றித் தாராளமாகத் தரப்பட்டது. சேனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட ஆட்கள் எல்லோரும் நன்றாகப் பரீட்சிக்கப்பட்டார்கள்.

கிருஷ்ணன் வந்து நகரத்தில் ஏற்பட்ட கஷ்டங்களைப் பார்த்து மகா கோபம் கொண்டு சால்வன் மேல் படையெடுத்துச் சென்று ஜெயித்தான். பிறகு அஸ்தினபுரத்தில் நடந்த செய்திகளும் பாண்டவர்கள் காட்டுக்குத் துரத்தப்பட்டதும் தெரிந்தது. உடனே கிருஷ்ணன், பாண்டவர்கள் தங்கியிருந்த வனத்துக்குச் சென்றான்.

ஃ ஃ ஃ

பாண்டவர்களிடம் மிக்க அன்பு வைத்திருந்த போஜ குலத்தவர்களும் விருஷ்ணி குலத்தவர்களும், சேதி தேசத்து ராஜா திருஷ்டகேதுவும், கேயர்களும், இன்னும் பலரும் கிருஷ்ணனுடன் கூட்டமாகப் பாண்டவர்கள் இருந்த வனத்துக்குச் சென்றார்கள். துரியோதனனுடைய செய்ததைக் கேட்ட இவர்கள் மகா கோபங் கொண்டு, ''இவர்களுடைய இரத்தத்தைப் பூமி குடிக்கப் போகிறது'' என்றார்கள்.

விசாரிக்க வந்த அரசர்களின் பேச்சு முடிந்தபின், திரௌபதி கிருஷ்ண பகவானிடம் வந்தாள்.

''ஒற்றை வஸ்திரத்தைத் தரித்துத் தீண்டாத நிலையில் இருந்த சமயத்தில்

நான் சபைக்கு இழுக்கப்பட்டேன். திருதராஷ்டிர புத்திரர்கள் என்னை அவமானப்படுத்திப் பரிகசித்தார்கள். தங்களுக்கு நான் தாசியாகி விட்டேன் என்றே எண்ணினார்கள். பீஷ்மரும் திருதராஷ்டிரரும் நான் யார் என்பதையும் அவர்களுக்கு மருமகள் என்பதையும் மறந்து விட்டார்கள். ஜனார்த்தனரே! என் கணவர்களும் என்னைக் காப்பாற்றவில்லை'' என்றாள். பிறகு பெருகிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, ''அற்பர்களால் துன்பப்படுத்தப் பட்டேன். பீமனுடைய தேக பலம் பயன்படாமல் சும்மா கிடந்தது. கேவலம் பலவீனர்களும் கூட உலகத்தில் தங்கள் மனைவிகளை ரக்ஷிப்பார்கள். இவ்வளவு பாபம் செய்த துரியோதனன் எவ்வாறு உயிருடன் இருக்கலாம்? ராஜாதி ராஜனாக இருந்த பாண்டுவின் மருமகளாகிய நான், தலைமயிரைப் பிடித்து இழுக்கப் பட்டேன். ஐந்து வீரர்களுடைய மனைவியாகிய நான் அவமானப்படுத்தப் பட்டேன். நான் எவ்வாறு உயிருடன் இருக்க முடியும்? மதுசூதனா! எனக்குப் பதிகள் இல்லை; புத்திரர்கள் இல்லை; பந்துக்களுமில்லை; சகோதரர்களுமில்லை. நீரும் இல்லாமற் போனீர்!'' என்று கோபாவேசமாய்ப் பெருமூச்சு விட்டுக் கொண்டு ரத்தக் கண்ணீர் கலந்த சொற்களைச் சொன்னாள்.

இவ்வாறு புலம்பிய திரௌபதியைக் கிருஷ்ணன் சமாதானம் செய்து, ''உன்னை யார் இவ்வாறு துன்பப் படுத்தினார்களோ, அவர்கள் எல்லாரும் இரத்தத்தில் நனைந்து உயிரற்றுக் கிடப்பார்கள்; நீ துயரப்பட வேண்டாம். நான் உனக்குப் பிரதிக்ஞை செய்கிறேன். பாண்டவர்களுக்கு என்ன துணை செய்ய வேண்டுமோ அதை நான் செய்வேன். நீ அரசர்க்கரசியாகப் பட்டம் பெறுவாய்! ஆகாயம் விழுந்தாலும், இமயமலை வெடித்தாலும், பூமி உடைந்து போனாலும் கடல் வற்றினாலும் என் வார்த்தை பொய்யாகாது: சத்தியம்'' என்று கண்ணன் திரௌபதிக்குச் சபதம் செய்தான்.

இப்படிச் செய்யலாமா, அப்படிச் செய்யலாமா என்று மேல்வாரியாகத் தத்துவங்களைக் கையாண்டு வாதம் செய்யும் சிலர், மகாபாரதத்தில் கண்ணன் செய்த செயல்களைப் பற்றி விமரிசனம் செய்வதுண்டு. கற்பனா சக்தியோடு இந்தப் பிரதிக்ஞையை நன்றாக ஆலோசித்தால் அவர்களுக்கு ஏற்படும் இத்தகைய சந்தேகங்கள் தீரும்.

இந்தப் பிரதிக்ஞையைக் கண்ணன் செய்ததும் திரௌபதி சமாதானம் அடைந்து அருச்சுனனைக் கடைக் கண்ணால் கண்ணீர்த் துளிகளின் வழியாகப் பார்த்தாள்.

''அழகிய கண்களை யுடையவளே! கண்ணபிரான் என்ன சொன்னாரோ அது நடக்கும்; மாறாது'' என்று அருச்சுனனும் பிரதிக்ஞை செய்தான்.

இப்படிக் கண்ணனும் பார்த்தனும் செய்த பிரதிக்ஞை எவ்வாறு நிறைவேறும் என்பதைக் காட்டி, திருஷ்டத்யும்னன் தன் சகோதரியைத் தேற்றினான். ''நான் துரோணரை எதிர்த்துக் கொல்லுவேன். சிகண்டி, பீஷ்மரைக் கொல்லுவான். பீமன் அந்தத் துராத்மாவான துரியோதனனைக் கொல்லுவான். அருச்சுனன் தேரோட்டி மகன் கர்ணனுக்கு யமனாவான்'' என்று திருஷ்டத்யும்னன் சொன்னான்.

கிருஷ்ணன், ''நான் துவாரகையில் இருக்கவில்லை. இருந்திருந்தால் கட்டாயம் இந்தச் சூதாட்ட மோசத்தை நடவாமல் செய்திருப்பேன்! திருதராஷ்டிரனும், துரியோதனனும் என்னைச் சபைக்கு அழைக்காமலிருந்தாலும் நான் போயிருப்பேன். பீஷ்மர், துரோணர், கிருபர் முதலான பெரியோர்களுக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லி, இந்த நாசகரமான சூதாட்டத்தை நிறுத்தி யிருப்பேன். நான் சால்வராஜனை எதிர்க்க வேண்டியதாகி நாட்டை விட்டு வெளியே போயிருந்தேன். சிசுபாலனை நான் யாகத்தில் வதம் செய்தேன் என்ற கோபத்தால் நான் துவாரகையில் இல்லாத காலத்தில் என் நகரத்தைச் சால்வன் முற்றுகை யிட்டான். பிறகு நான் துவாரகைக்குச் சென்றதும் விஷயம் தெரிந்து அவனைத் தொடர்ந்து துரத்திச் செல்ல நேரிட்டது. அவனை வென்று வதம் செய்த பின்னரே இந்தச் சூதாட்ட நிகழ்ச்சியைப் பற்றிக் கேள்விப்பட்டு உங்களைப் பார்க்க இங்கே வந்தேன். அணை உடைந்த பின் ஜலத்தைத் தடுக்க முடியாதது போல், உங்கள் துக்கத்தை இப்போது போக்க இயலாதவனாக இருக்கிறேன்'' என்றான்.

பிறகு, கிருஷ்ணன் விடைபெற்றுக் கொண்டு, அருச்சுனன் மனைவி சுபத்திரையையும் அவள் குழந்தை அபிமன்யுவையும் அழைத்துக் கொண்டு துவாரகை சென்றான். திருஷ்டத்யும்னன் திரௌபதியின் புத்திரர்களை அழைத்துக் கொண்டு பாஞ்சாலம் சென்றான்.

**(தொடரும்)**

# இது போன்ற அழகான பன்னிரண்டு படங்களை எடுங்கள்



ரூ. 46.50



## க்ளிக்III ...வாங்கிய நாளன்றே

* இலக்கு நோக்கி 'கிளிக்' குங்கள். சரிபடுத்தும் தொல்லையில்லை-தவறுகள் நேரவும் வாய்ப்பில்லை.
* 12 பெரிய (6x6 cm) படங்களை அளிக்கிறது ஒவ்வொரு 120 சுருளும்.
* எவர்-ரெடி உறை, போர்ட்ரெயிட் லென்ஸ் மற்றும் பிளாஷ் அமைப்பு தனி விலையில் கிடைக்கின்றன.



ஆக்பா கண்காணிப்பின் கீழ் தயாரிப்பவர்கள்: தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்., பரோடா.



ஏக போக விநியோகஸ்தர்கள்:

**ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட்**

பம்பாய் · புது டில்லி · கல்கத்தா · சென்னை.

CMAG-103-203

எடுப்பான மூக்கும், அகன்ற கண்களும், புன்னகை பூத்த வதனமும், வனப்பு மிக்க தோற்றமும் கொண்ட சந்தா ஸாவண்ட் பெண் விமானிகள் சங்கத்தின் தலைவி.

இந்தியாவில் ஆண்கள் விமானம் ஓட்டத் தொடங்கிய நாள் முதலே பெண்களும் இக்காரியத்தில் ஈடுபடத் தொடங்கி விட்டனர். இந்தியாவில் பைலட் லைசென்ஸ் பெற்ற முதல் பெண்மணி ஜே. ஆர். டி. டாட்டாவின் சகோதரி தின்ஷா பெடிட் சீமாட்டி. விமானியாக விளங்கிய இரண்டாவது பெண்மணியும் டாட்டா குடும்பத்தைச் சேர்ந்தவரே.

இன்று பாரத நாட்டில் சுமார் ஐம்பது பெண்கள் பைலட் லைசென்ஸ் பெற்றுள்ளனர். பம்பாயில் பெண் பைலட்கள் சங்கம் அண்மையில்தான் தோன்றியது. பதினேந்து அங்கத்தினர்கள் இருக்கிறார்கள்.

அமெரிக்காவில் 20,000 பெண் விமானிகள் இருந்தபோதிலும் இன்றுவரை எந்த விமானக் கம்பெனியும் பெண் பைலட்டுகளை வேலைக்கு வைத்துக் கொண்டதில்லை. ஆனால்









# பறக்கும் பாவை

இந்தியாவில் இதுவரையில் இரு பெண்கள் விமானக் கம்பெனியில் பைலட் உத்தியோகம் பார்த்திருக்கின்றனர். இது பாரத நாட்டுப் பெண் குலம் பெருமைப்படத் தக்க செய்திதானே?

'தொண்ணூற்று ஒன்பது' என்ற விநோதமான பெயர் கொண்ட அகில உலகப் பெண் விமானிகள் சங்கம் ஒன்று உண்டு. இது 1967ல் வாஷிங்டனில் மகாநாடு கூட்டியது. இம்மகாநாட்டில் பாரத நாட்டின் சார்பில் கலந்துகொண்டார் சந்தா ஸாவண்ட். அங்கே கிழக்குக் கரையிலிருந்து மேற்குக் கடற்கரை வரை சுமார் 2500 மைல்களுக்கு நடந்த விமானப் போட்டியில் 76 விமானங்கள் கலந்து கொண்டன. இவற்றில் 51 விமானங்கள்தான் இறுதிவரையில் சென்றன. இவற்றுள் ஒன்றுன 'ஐந்து கொடிகள்' என்ற பெயர் கொண்ட விமானத்தில் சந்தா ஸாவண்டுடன் இன்னும் நாலு பெண் விமானிகளும் இருந்தனர்.

சந்தா ஸாவண்டுடைய கணவருக்கு விமானம் ஓட்டுவதில் ஆர்வம் கிடையாது. ஸ்ரீமதி சந்தா பம்பாயில் பொறி இயல் துறையில் நிபுணர்களான காமான் கம்பெனியில் பொதுஜனத் தொடர்பு அதிகாரியாகப் பணியாற்றுகிறார்.

விமானியாக உத்தியோகம் பார்க்கத் தகுதியுடைய லைசென்ஸை சந்தா பெற்றிருக்கிறார். இவரது திறமை 97 சதவிகிதம் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. எனினும் விமானியாக உத்தியோகம் ஏற்பதற்கான வாய்ப்புக்கள் பெண்களுக்கு எளிதில் கிடைத்து விடுவதில்லை என்று நியாயமாகக் குறைப்பட்டுக் கொள்கிறார் சந்தா. விமானியாக விளங்க ஆர்வம்

ஏற்பட்டது எப்படி? குழந்தையாக இருந்த போது சந்தா தனது தகப்பனாரோடு விமானத்தில் பிரயாணம் செய்து கொண்டிருந்தாள். சூரத் நகரின்மீதாக விமானம் பறக்கையில் சந்தா திடீரென்று கேட்டாள்: ''நான் விமானம் ஓட்டலாமா அப்பா?'' ''பேஷாக!'' என்று பதிலளித்தார் அவர்.

ஆனால் எண்ணம் ஈடேறச் சந்தா தனது பதினேழாவது வயதுவரையில் காத்திருக்க வேண்டியிருந்தது. அப்போதும் அவள் தாயார் தடை விதித்தாள். விமானத்தில் பறக்கையில் விபத்து ஏற்பட்டு மகளின் உயிருக்கு ஆபத்து நேர்ந்தால்...? என்பது அவள் கவலை.

''விமானத்தில் பறக்கும்போதுதான் சாக முடியுமா? நான் இங்கேயே சாகிறேன்'' என்றாள் சந்தா. அந்த வினாடி முதல் உண்ணாவிரதம் இருக்கத் தொடங்கிவிட்டாள்! மூன்று நாட்கள் முழுப் பட்டினி. நாலாவது நாள் தாயுள்ளம் இளகியது. சந்தாவுக்கு விமானமோட்டி பயிற்சி பெற அனுமதி கிடைத்தது.

''குடும்பத்தில் யாரையாவது விமானத்தில் அழைத்துப் போனதுண்டா?''

''இல்லை; அவர்கள் 'அழைத்துப் போ' என்று கேட்டதுமில்லை. நானாக அவர்களை அழைப்பதுமில்லை. தனியாக வானிலே பறப்பதிலே ஒரு நிம்மதி இருக்கிறது'' என்னும் சந்தா விமானம் ஓட்டுகையில் சௌகரியத்துக்காக ஆண்களைப் போல் பாண்ட்டும் ஷர்ட்டும் அணிகிறார். ஆயினும் இவருக்குப் பிடித்தமான உடை புடைவையே.

கணவர் ஸாவண்ட்டை இவர் முதலில் சந்தித்தது லண்டனில். ஸ்ரீ ஸாவண்ட் மோட்டார் கார் இஞ்ஜினியர். குழந்தைகள் இல்லை.

நீச்சலடிப்பதும் குதிரை ஏற்றமும் சந்தா ஸாவண்ட்டுக்குப் பிடித்தமான பிற பொழுது போக்குகள்.

''விமானியாக விளங்குவது எப்படி இருக்கிறது?'' என்ற கேள்விக்கு, ''பெண் விமானிகள் பலரும் விச்ராந்தியாக இருக்க விரும்பித்தான் விமானத்தில் ஏறிப் பறக்கிறார்கள்'' என்கிறார் சந்தா. ''எங்கள் கவலைகளையெல்லாம் மறக்கப் பறக்கிறோம். மேகங்களுக்கு மேலே பறந்தபடி பூமியை நோக்குகையில் கவலைகளெல்லாம் எங்கோ மறைந்து விட்டாற்போல் தோன்றுகிறது.

''ஞாயிற்றுக் கிழமைகளிலும் மற்ற விடுமுறை நாட்களிலும் பலர் பீச், ஸினிமா என்று போகிறார்கள். நான் விமானத்தில் பறக்கிறேன் அவ்வளவுதான். மோட்டார் காரோ அல்லது சைக்கிளோ ஓட்டுவது போல் சர்வ சாதாரணமாகத்தான் விமானமோட்டுவது இப்போது இருக்கிறது எனக்கு'' என்னும் சந்தா ஸாவண்ட், விமானம் மேலே கிளம்பும்போதும் கீழே இறங்குகையிலும் மானசீகமாகக் கடவுளைப் பிரார்த்திப்பது உண்டாம்.

ஆதாரம்; நன்றி: 'என்லேட்'

## என்ன.....என்ன.....என்ன.....?



# சிந்தால் சோப் விசேஷச் சலுகை!

## 15 பைசா மிச்சப்படுத்துங்கள்.

உங்கள் மனத்திற்குகந்த சிந்தால் சோப்பை நீங்கள் இப்போது 15 பைசா குறைந்த விலையில் பெற முடியும். நீங்கள் செய்ய வேண்டியது இதுதான்: புள்ளிக் கோடு வழியே இக் கூப்பனைக் கத்தரித்து, உங்கள் கடைக்காரரிடம் கொடுங்கள். மறவாமல் அடுத்துவரும் சிந்தால் விளம்பரங்களிலும் இக் கூப்பன் வருவதைக் கவனித்து உபயோகியுங்கள்.

ஜி-11 (ஹெக்ஸாக்ளோரபின்) சேர்ந்த சிந்தால் சோப் கிருமிநாசினி மட்டுமல்ல; உடம்பிலுள்ள துர்நாற்றத்தையும் அகற்றுகிறது!

இந்த திட்டம் தற்போது தமிழ்நாடு, கேரள மாநிலங்களுக்கு மட்டுமே விஸ்தரிக்கப்பட்டுள்ளது.

## 15 பைசா மிச்சம்!




சிந்தால் கூப்பன்

இதை உங்கள் கடைக்காரரிடம் கொடுங்கள்.

திரு/திருமதி குமாரி ........................................................

விலாசம் ........................................................................

நான் வழக்கமாக உபயோகிப்பது .................... டாய்லெட் சோப். KMS.

# இனிக்கும் நினைவுகள்

## 7. இப்படியும் ஒரு நிம்மதி!

பூத்த மலர்கள் காம்பினின்றும் கழல்வதுபோல் உயிர்கள் இந்த உலகை விட்டு விலகுவதில் விந்தை யொன்றும் இல்லை. என்றாலும் அந்த உயிர் க்ஷய ரோகத்தால் பிடிக்கப்பட்டு இறக்கும் போது...அப்பப்பா, என்ன கொடுமை! எத்தனை துயரம்!

அந்த வார்டில் வயதான ஆங்கில மாது ஒருத்தி மூன்று நாட்களுக்கு முன் இறந்து விட்டாள். ஜன்னலோரக் கட்டிலில் அந்த நோயாளி படுத்திருந்ததால், சாளரக் கம்பியில் மாட்டப் பெற்றிருந்த இரக்கமே உருவான ஏசுவின் படம் அப்படியே இருந்தது. சூன்யமடைந்த படுக்கையை அடுத்துக் கண்ணில் படும் ஏசுவின் படம் மனத்தின் நிகிலுக்கு ஒத்தடமாக நின்றது.

அந்த வார்டில் எல்லாப் பெண்மணிகளும் செல்லம்மாவிடம் மிகுந்த பிரியம் காட்டினர். ஸிந்திப் பெண் சாவித்திரி காலையில் எழுந்ததும் தனக்கு மூன்றாவது கட்டிலில் இருக்கும் செல்லம்மாவை எட்டிப் பார்த்து, 'நமஸ்தே மாதாஜி' என்று சொல்லத் தவறியதில்லை. தன் முதல் விழிப்பில் முதலில் காணும் முகம் மாதாஜியினுடையதாக இருக்க வேண்டுமென்பது அவள் 'விருப்பமாகி விட்டது. ஆனால் செல்லம்மாவின் அருகில் நெருங்கி வந்தாளானால் மொழி ஒரு பிரச்னையாகி விடும். கண்க



ளால் எத்தனைதான் பேசலாம்? பாசத்தையும் ஆசையையும் கூட்டிக் காட்டலாம். கேள்வி கேட்டுப் பதில் பெற முடியுமா? ஆனாலும் சாவித்திரி தனக்கு வரும் தூத்பேடாவைக் கொணர்ந்து தரும்போது அமிர்தத்தை ஏந்தும் மகிழ்வு செல்லம்மாவுக்கு ஏற்படுவது வழக்கம். இந்த அன்பை மறுக்க முடியாத நெகிழ்வில் மனம் நனைந்துவிடும்.

மணி ஐந்தாகியும் சாவித்திரியின் கணவன் வந்தபாடில்லை. அவன் கட்டில் படுப்பதும், வண்ண நூலிழைகளால் பை பின்னுவதுமாகக் கண்களை வயல் பக்கப் பாதையிலேயே லயிக்க விட்டிருந்தாள். சற்றைக்கொரு தரம் ஊதும் மின் ரயில்களின் ஒலியும், தாம்பரம் சாலையில் ஓடும் பஸ்களின் இரைச்சலும் மெல்லியதாகக் கேட்டு மங்கிக் கொண்டிருந்தன. மற்ற நோயாளிகளைப் பார்க்க வந்தவர்கள் எல்லாம் திரும்பிக் கொண்டிருந்தனர். அலுமினியப் பாத்திர வியாபாரி ஒருவன் கணிசமான விற்பனையோடு திரும்பிச் சென்று கொண்டிருந்தான். பணியாளர்களும் 'டியூட்டி' மாற்றிக் கொண்டனர். சொறி நாய் ஒன்று சுற்றிச் சுற்றிக் குலைத்துக் கொண்டிருந்தது. இதைச் செவி மடுத்ததுமே பத்தாம் எண் படுக்கையிலிருந்த சீதம்மா ஓடிவந்து நாயை விரட்ட முயன்றாள். மூன்று தினம் முன்பு இதே சொறி நாய் கத்தக் கொண்டுதான் ஒன்றும் எண் படுக்கையில் இருந்த ஆங்கில மாது இறந்து விட்டதாக அவளது மனம் திடமாக நம்பியது.



சாவித்திரி நிலைகொள்ளாமல் தவிப்பதைக் கண்ட செல்லம்மா, ''உன் கணவன் இன்று வரவில்லியா, அம்மா?'' என்று இதமாகக் கேட்டாள். இந்தச் சின்ன வயசில் இங்கு வந்து சேர நேர்ந்த அவள் விதிக்கு வருந்தும் குரலாக ஒலித்தது அது. மாதாஜியின் குரல் கேட்டதுமே சாவித்திரி ஓடோடி வந்து, ''மாதாஜி! உடம்பு எப்படி இருக்கு?'' என வினவினாள்.

உலகத்தின் பலமெல்லாம் தன்னிடம் ஒன்று திரண்டு வந்து விட்டாற் போன்ற உணர்ச்சியில் செல்லம்மாள் ஆதரவோடு சாவித்திரியின் முதுகை வருடினாள். அப்போது வார்டின் கோடியில் சாவித்திரியின் கணவனின் தலை தெரிந்தது. அதைக் கண்டு சாவித்திரி துள்ளி ஓடினாள். செல்லம்மாவுக்குக்

கீதாவின் நினைவு வந்தது. மகளின் பாசம் கொஞ்ச நேரம் பிரிவுத் துயரைக் கிளறி வருத்தியது.

''என்னப்பா, ராமா! எல்லாம் உன் திருவிளையாட்டு!'' செல்லம்மாவின் தலைமாட்டில் ராமர் பட்டாபிஷேகப் படம் ஒன்று மாட்டப்பட்டு மலர் ஆரம் சூட்டப்பட்டிருந்தது. அதை நோக்கிக் கை கூப்பினாள் அவள்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் திவாகரன் வந்தான். ஆரஞ்சுப் பழ முத்துக்களை உதிர்த்துத் தந்தான். திவாகரனின் அமைதியும், பொறுமையும் வசந்தனுக்கு ஏது? இப்படி நிதானமாக ஒரு நாளாவது வசந்தன் அம்மாவுக்குப் பழம் உரித்துத் தந்ததுண்டா? பைநிறையப் பழங்களைச் சுமந்து வந்து கொட்டுவான். ''எனக்காகச் சாப்பிடு அம்மா. நிறையச் சாப்பிடு அம்மா'' என்று மனம் நிறைந்த வார்த்தைகளைக் கொட்டிச் செல்வான். அவன் பொறுமை அவ்வளவுதான்.

''போதுமப்பா, திவாகர்! இப்படி உதிர்த்த பழத்தை நின்று நிதானமாகச் சாப்பிடவே களைத்து விடுகிறது'' என்றாள் செல்லம்மா.

''அப்படியானால் நாளை பழம் பிழியும் கிளாஸ் ஒன்று வாங்கி வருகிறேன், அம்மா!''

''உனக்குப் படிப்பை விட்டு விட்டுக் கடைக்குப் போவதென்றால் சிரமமில்லையா? வேண்டாம். வசந்தன் வந்தால் வாங்கி வரச் சொல்கிறேன்!''

''அதனாலென்ன அம்மா! தாயன்பையே கண்டிராத எனக்கு உங்களுக்கு இந்த அளவாவது செய்து என் குறையைப் பூர்த்தி செய்து கொள்வது ஓர் ஆனந்த அனுபவமாக இருக்கிறது. ஆரம்பத்தில் வசந்தனுக்கு உதவுவதாக எண்ணித்தான் தங்களைக் காண வந்தேன். ஆனால் உங்களைக் கண்டது முதல் எனக்காகவே, எனது பரிபூரண மகிழ்வுக்காகவே இங்கு வந்து உங்களுடன் உரையாடுவதாகப் படுகிறது. என்னிடம் நீங்கள் அன்பாகப் பேசும் போது என் அன்னையைக் காணும் பரவசம் ஏற்படுகிறது. நீங்கள் உரிமையோடு என்னிடம் எதையும் கூறலாம். நானும் வசந்தனும் வெறும் நட்புக்கு மட்டும் பாத்திரமானவர்களில்லை. நாங்கள் இருவரும் உடன் பிறந்த சகோதரர்களுக்கும் ஒரு படி மேல்!''

திவாகரன் இத்தனை தூரம் ஒருநாளும் பேசியதில்லை. அவனது இதயத்தின் மூலையில் எங்கோ ஒளிந்திருந்த ஏக்கம் உடைப்பெடுத்து உரியவர்களிடம் பொங்கிக் கொட்டியது போன்ற நிம்மதி ஏற்பட்டது. செல்லம்மா திவாகரனின் தலையை வருடியவாறே, ''திவாகர்! வசந்தன் உன்னைப் பற்றி நிறையக் கூறியிருக்கிறான். உண்மையிலேயே உன்னைப் பார்க்கும்போதெல்லாம் எனக்கு ஒரே எண்ணம்தான் ஏற்படுகிறது. கூடப் பிறந்த ஒரு சகோதரன் இருப்பது தோளுக்குச் சமானம் என்பார்கள். வசந்தனைப் பற்றி எனக்குக் கவலையில்லை. அவன் என் பிரிவைத் தாள மாட்டான். ஆனால் ஏற்பட்ட விதி மாறிவிடப் போவதில்லை. உன் அண்மையும், ஆறுதலும் மட்டுமே அவனை இதப்படுத்தித் தன்வழி நடக்க விட வேண்டும்...'' என்று நீண்ட பெருமூச்செறிந்தாள்.

செல்லம்மாவின் பேச்சில் உட்குறிப்பாக ஓடும் மரணம் பற்றித் திவாகரன் உணர்ந்து கொண்டாலும், அதற்கு ஆறுதலாக ஏதேனும் சொல்லப்போய், அதுவே விரிந்து துயரமாகக் கவிந்து விடும் என்ற அச்சத்தோடு மௌனமாகி விட்டான். அந்த மௌனம் ஒருசில கணங்கள் நீடிக்கவே சுற்றுப்புறத்தில் கவிந்து கொண்டுவரும் இருளைப் பார்த்தவாறே செல்லம்மா, ''திவாகர், நேரமாகி விட்டது. புறப்படு!'' என்று அவனுக்கு விடைகொடுத்தனுப்பினாள்.

திவாகரன் பையோடு சாலை வழியே நடக்க ஆரம்பித்தான். அவன் உருவம் மறையும் வரையில் பார்த்துக் கொண்டிருந்த செல்லம்மா படுக்கையில் படுத்தாள். என்ன என்னவோ நினைவுகள் அவள் மண்டையில் ஊற்றுகச் சுரந்தன.

காலமெல்லாம் கணவனுக்குக் கட்டுப்பட்டு வாழ்ந்த அவளுக்கு அவரைப் பற்றி ஓர் ஆசை, பிறர் மனத்தை மதிக்கத் தெரியும் மென்மையான உள்ளம் படைத்தவராக அவர் இருக்கக் கூடாதா என்று!

என்னதான் நியாயத்துக்கு வாதாடினாலும், என்னதான் கடவுள் பக்தி இருந்தாலும், உள்ளத்தின் முரட்டுத்தனத்தால், வளரும் பிடிவாதத்தால் எல்லாம் நசித்து விடுகின்றன. பேசும் குரலில் கண்டிப்பும் கறாரும் இருந்தால் எத்தனைபேர் அதில் லயப்பட்டு விடுவார்கள்? கோபம் வந்தால் கண் மூக்குத் தெரியாமல் கதறுவதும், குற்றம் கண்டவிடத்துப் பதறித் துடிப்பதும், அமைதியும், நிதானமும் இல்லாமல் வார்த்தைகளைக் கொட்டுவதுமாக அவர் கூக்குரலிடுவார். எல்லாவற்றையும் பல்லைக் கடித்துப் பொறுப்பாள் செல்லம்மாள். வேலைக்காரிகள் மாறிக் கொண்டேயிருப்பார்கள். ஒவ்வொருத்தியும் தவறு செய்கிறாள் என்பது சீதாபதியின் குற்றச்சாட்டு. ஒரு சிறு

# சக்திக்கும் வலிமைக்கும் போர்ன்விடா!

சக்தியளிக்கும் போர்ன்விடா நாவினிமையிலே சிறந்ததோர் பானமாக விளங்குவதன் ரகசியம்—செழுமையான கோகோ!






வளமையின் சிறந்த பொருள்களான கோகோ, மால்ட் சர்க்கரை, பால் இவையாவும் திட்டமாக கலக்கப் பெற்று தயாரிக்கப்பட்டதன் பலன்—தெம்பும் திடமும் தரும் ஒரு தீஞ்சுவை பானம் போர்ன்விடா. சூடான பாலிலே போர்ன் விடா கலந்து ஒரு கோப்பை அருந்துங்கள்...நாவுக்குத் தான் என்ன இனிமை, உடம்புக்குத்தான் என்ன வலிமை.

சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்

**காட்பரிஸ் போர்ன்விடா**

3226A-Tm.

தவறுகூடச் செய்யாமல் யார்தான் இருக்க முடியும்? எல்லாவற்றையும் தானே செய்து நொந்தாள் செல்லம்மாள். மணியைத் தெரிந்துகொள்ள அங்கு கடிகாரமில்லை. அந்த அளவுக்கு வறுமையுமில்லை. எனவே செல்லம்மாள் கடிகாரம் வேண்டும் என்று விரும்பிய போது சீதாபதி மறுத்துவிட்டார்.

சென்னைக்குப் புறப்பட விடியற் காலையில் ஒரு ரயில் உண்டு. அதில் தான் வசந்தன் ஊருக்கு வந்தால் புறப்பட வேண்டும். அதிகாலை செல்லும் மகனுக்காகச் செல்லம்மாள் ஒரு குறிப்பாக மணி தெரியாமல் எழுந்து இட்டிலிகள் செய்து சட்டினியும் அரைத்துவிட்டு வசந்தனை எழுப்புவாள். தூக்கக் கலக்கத்தில் கண்கள் கோவைப் பழமாகச் சிவக்க வசந்தன் எழுந்து அடுத்த வீட்டுக் கதவைத் தட்டுவான், மணி என்னவென்று கேட்க. மணி இரவு பன்னிரண்டரை என்று பதில் வரும். சிவந்து குழம்பிய வசந்தனின் கண்களில் இரத்தக் கண்ணீர் உதிரும். "பத்து மணிக்குப் படுத்து எத்தனை நிமிஷம் அம்மா தூங்கினாய் நீ? டிபன் செய்து முடித்தும் மணி பன்னிரண்டரைதானே ஆகிறது!" என்று உருகுவான். இதேபோல் எத்தனையோ தடவை. விடியற்காலை ஐந்து மணிக்குப் புறப்பட வேண்டிய வசந்தனை நள்ளிரவே தட்டி எழுப்பும் அன்னைக்கு ஓய்வு கொடுக்கத் தீர்மானித்து, தந்தையின் பலத்த எதிர்ப்பைச் சமாளித்து ஓர் அலாரம் கடிகாரத்தை வாங்கி வந்துவிட்டான். அப்புறம் இந்த ஒரே ஒரு விஷயத்தில் செல்லம்மாளுக்கு ஓய்வு கிடைத்தது. சீதாபதி ரொம்ப நாள் வரை இருபத்தைந்து ரூபாய் கொடுத்து இந்தக் கடிகாரத்தை வாங்கியதற்காக வசந்தனை மன்னிக்கவே இல்லை.

இதைப்போல் அன்றாடத் தேவைக்கு அவசியமான பொருள்களைக்கூட வாங்க மறுத்து, பிறரது கேலிக்கும், ஏளனத்துக்கும் இலக்காகி, அவமானப்பட்ட போது செல்லம்மாள் தனக்குள் புழுங்கினாள். ஆனாலும் கணவனுக்குரிய பணிவிடைகளில் ஓர் எள்ளத்தனைகூடத் தவறி இருக்குமா? 'லொக் லொக்' என்று ஜுர வேகத்துடே செல்லம்மாள் இருமித் துடிக்கும்போது அருகே வந்து ஆசுவாசப்படுத்தவோ ஆதுரமாக இரண்டு வார்த்தைகள் பேசவோ சீதாபதிக்கு மனமிருந்ததில்லை. தூர நின்றவாறே, "நீ தியாகி! கடவுள் உன்னைச் சோதிக்க மாட்டார்" என்று தம் பாட்டில் பிரார்த்தனையில் ஈடுபடுவார். "மருந்து வாங்கித் தரவில்லையா?" என்று யாரேனும் கேட்க வேண்டியதுதான் தாமதம். "மருந்துக்கெல்லம் பெருமருந்தாய் அந்தச் சர்வேசுவரன் இருக்கிறானே. அவனன்றி ஓரணுவாவது அசையுமா? நமது அஞ்ஞானத்தால் 'மருந்து மருந்து' என்று மாயையில் உழலுகிறோம்!" என்று கூறிவிடுவார்.

'பக்தி அவசியம்தான். ஆனால் அது லோகாயதத்தோடு ஒட்டி இருக்கவேண்டும். கடவுள் உணவை மனிதர்களுக்குப் பக்குவப்படுத்தியே தருவதில்லையே! அதற்குரிய பாடுபட்டால்தானே உணவு பக்குவமாகக் கிடைக்கிறது! நாம் உழைத்தால்தான் அவனருள் என்னும் பயன் கிட்டுகிறது' — இப்படிக் கூறச் செல்லம்மாளின் நாத் துடிக்கும். ஆனால் மனம் அடக்கிவிடும்.

கனிவான உள்ளத்தால் மட்டும் உலகத்துக்கு என்ன பயன்? அது பயனடைவது கனிவான சொற்களாலும், செயல்களாலும்தான். அவரையும், அவர் அகத்தையும் உணர்ந்த செல்லம்மாளே அவருடைய புறச்சொற்களின் கடுமையைப் பொறுக்காமல் அவமானத்தால் குன்றி விடுவதுண்டே!

சட்டென்று செல்லம்மாள் பழைய ஞாபகங்களை உதறி விடுவது போல், ராமர் படத்தைப் பார்த்தவாறே எழுந்து உட்கார்ந்தாள். அனல் மனப் படலங்களை அத்தனை சீக்கிரம் விலக்கி விட முடியுமா? உள்ளுக்குள்ளே பொங்கும் ஏக்கமும், கோபமும் கணவர் சீதாபதியையே சுற்றிச் சுற்றி வந்தன. செல்



லம்மா ஆஸ்பத்திரியில் சேர்ந்து இரண்டு மாதங்களுக்கு மேலேயே ஆகிறது. ஒரு முறை வந்து மனைவியைப் பார்க்கச் சீதாபதிக்குத் தோன்றியதா? இப்படி நினைத்ததுமே அவள் கண்கள் பனித்தன. அப் பனிப்பில் மனம் கனத்துக் கொண்டது. 'இத்தனை நாட்களும் அவள் கணவனுக்காகச் செய்த சேவையும், தொண்டுகளும், பட்ட அவமானமும், துன்பங்களும் கேவலம் சாதித்தவை இத்தனை தானா? அன்பு வேண்டாம். பரிதாபமும், இரக்கமும் கூட அவர் மனத்தில் சுரக்கவில்லையா? மணந்த மனைவி சாகப்போகும் நிலையில் நோயின் தீவிரப் பிடியில் இருக்கும்போது அவள் கணவனுக்கு அவளை வந்து காண வேண்டும், நாலு வார்த்தைகள் ஆறுதலாகப் பேச வேண்டும் என்று கூடத் தோன்றவில்லையே! இவ்வளவுதானா மனமும் மனமும் கலந்த வாழ்க்கைத் தத்துவத்தின் பொருள்? சீ! இனி திரும்புவதா? இப்படிப்பட்ட கணவனிடமா? வேண்டாம். அவரோடு கூடி வாழ்ந்த அநுபவக் கறையைப் போக்கும் ஒரே வழி மரணம்தான். அதைக் கேட்டு ஒரு கால் நெகிழ்ச்சியுற்று இரண்டு சொட்டுக் கண்ணீர் எனக்காக வடித்தால் அதைக் கண்டு என் ஆன்மா சாந்தியடையட்டும்.'

சீதம்மா அவள் அருகில் வந்து அமர்ந்தாள். செல்லம்மாவை வியப்புடன் பார்த்த அவள், ''என்ன அம்மா, உடம்பை என்னவாவது பண்ணுகிறதா?'' என்று கேட்டாள்.

''ஒன்றுமில்லை சீதா!'' என்று தன்னைச் சமாளித்த செல்லம்மா, ''நீ சாப்பிட்டு விட்டாயா?'' என்று வினவினாள்.

''சாப்பிட்டுவிட்டேன். நீங்கள் இன்னும் சாப்பிடவில்லை போலிருக்கிறதே! நான் எடுத்து வைக்கிறேன், சாப்பிடுங்கள்'' என்றவாறே சீதம்மா தட்டைக் கழுவிக் கொணர்ந்து படுக்கையருகே ஸ்டூலில் வைத்தாள். உணவைப் பரிமாறியவாறே, ''நீங்கள் ரொம்பக் கொடுத்து வைத்தவர்கள் அம்மா. உங்கள் பிள்ளை உங்கள் மீது எத்தனை அன்பு வைத்திருக்கிறார்!'' என்றாள்.

செல்லம்மா சிரித்தாள். கொஞ்ச நேரத்துக்கு முன் கணவனின் அன்பு கிட்டாமல் நொந்து வாடிய உள்ளத்தில் தேன் துளித்தது. ஏன், வசந்தன் இல்லையா அவளுக்கு? சீதா இல்லையா? திவாகரன் இல்லையா? அந்த வார்டில் தானாகட்டும். சீதம்மா, சாவித்திரி போன்ற மற்றவர்கள் இல்லையா? உலகத்தில் அவள் சந்திக்க நேரும் ஒவ்வொரு மனிதரும் கண்களில் மரியாதை உணர்ச்சி படர, சொல்லில் கனிவு தோன்ற அவளிடம் பேசத் தவறுவதில்லையே! ஆகா! கடவுள் எத்தனை கருணை உள்ளவர்! ஒன்றை ஒன்றால் சரிக்கட்டி விடும் அவரது இயல்பில் உலகம் காய்க்கிறது, பூக்கிறது. பின் கனிந்து உதிர்கிறது. ஒவ்வொரு மனித உள்ளத்திலும் மணிகளைக் கோக்கும் சூத்திரக் கயிறாக அவர் மறைந்து நிற்கிறார் என்பது எத்தனை உண்மை! வாழ்க்கையின் தோல்விக் கோணங்களையெல்லாம் வெற்றியுடன் சந்தித்து மீண்ட செல்லம்மாவின் இதயத்தையே ஏக்க மாயை பிடிக்க வந்து விட்டதே. அந்த உயர்ந்த உள்ளம் கண நேரம் படர்ந்துவிட்ட உலகாயத ஏக்கங்களை உதறி நிமிர்ந்தது. செல்லம்மா சாப்பிட்டு முடிந்த தட்டைச் சீதம்மா பறித்துக் கழுவி வைத்தாள்.

''எங்கே சாவித்திரியைக் காணோம்? இந்த நேரத்துக்கு இங்கே வந்து விடுவாளே!'' என்றவாறே செல்லம்மா எட்டிச் சாவித்திரியின் கட்டிலை நோக்கினாள். சீதம்மாவும் எட்டிப் பார்த்துவிட்டு, ''ஆமாம், அம்மா! சாயந்திரம் அவள் கணவன் வந்தபோது மலைப் பக்கம் போனாள். இன்னும் வரவில்லை. மணி ஏழரையாகப் போகிறதே!'' என்றாள்.

''வீட்டுக்குப் போகும்போது அவள் கணவர் நிர்மல் என்னிடம் சொல்லிக் கொள்ள வருவாரே! இன்னும் இருவரும் திரும்பவில்லையே, ஏன்?... சரியம்மா சீதா, நீ போய்ப் படு'' என்ற







வாறே செல்லம்மா தலையணையை ஒழுங்கு செய்தாள்.

சீதம்மா சென்றதும் கொஞ்ச நேரம் செல்லம்மா இதய பூர்வமான பிரார்த்தனையில் ஈடுபட்டாள். அது முடிந்ததும் படுப்பதற்கு முன் அவள் சாவித்திரியின் படுக்கையை நோக்கினாள். அங்கே அசையாத சிற்பமாக அவள் படுத்திருந்தாள். இப்படி வெகு நேரம் கழித்துத் திரும்பிய சாவித்திரி செல்லம்மாவை வந்து பார்க்காமல் படுத்துவிட்டது இதுவே முதல் தடவை. அதோடு அவள் கணவனும் வந்து சொல்லிக் கொண்டு போகவில்லை.

''சாவித்திரி!''

செல்லம்மாவின் மெல்லிய குரல் சாவித்திரிக்கு எட்டவில்லை போலும். சீதம்மா எழுந்து வந்து சாவித்திரியை அழைத்தாள். அவள் முகம் சோர்ந்திருந்தது. வழக்கமான புன்சிரிப்பும், மலர்ந்த முகமுமில்லை. ஏன், கணவன் மனைவிக்குள் ஏதும் மனஸ்தாபமோ?

''உட்காரு, சாவித்திரி.''

சாவித்திரி செல்லம்மாவின் காலையொட்டி அமர்ந்தாள். சீதம்மா தன் படுக்கைக்குச் சென்றாள்.

''என்ன சாவித்திரி! இருட்டி இத்தனை நேரம் கழித்துத் தனித்து வரலாமா? உன் கணவர் கொண்டு வந்து விடவில்லையா?''

சட்டெனத் தலை குனிந்தாள் அவள். கண்களின் ஒளி மணிகள் மெல்லிய விளக்கொளியில் பளபளத்தன.

''ஏன், ஏனம்மா அழறே? உனக்கும் உன் புருஷனுக்கும் ஏதேனும் மனஸ்தாபமா? சொல்லேன்!''

''மாதாஜி! என் ஒரே குழந்தை இறந்து விட்டானும்! நான் என்ன செய்வேன், மாதாஜி...?''

அந்த இழப்புக்குச் செல்லம்மாளால் எவ்விதம் ஆறுதல் கூற முடியும்? காலம் மாற்றவேண்டிய துயரம் அது. சற்று நேர மௌனத்துக்குப் பின், ''எப்போதாம்?'' என்று கேட்டாள் செல்லம்மா.

''குழந்தை போய் ஒரு மாதமாகிறதாம். எனக்கு அதிர்ச்சி கூடாதென அவர் சொல்லாமலேயே தம்பாட்டில் துயரத்தை விழுங்கிக் கொண்டிருந்திருக்கிறார்! நான் குழந்தையை அழைத்து வரும்படி நச்சரித்தவாறே இருந்தேன். சாக்குப் போக்குச் சொல்லி வந்த அவர் இன்று துயரம் தாங்க முடியாமற் போகவே கதறிவிட்டார். அவருக்குக் குழந்தை என்றால் எத்தனை ஆசை...! அவரை நினைத்தால்தான் எனக்குத் தாங்கவில்லை....''

செல்லம்மாவின் மேனி சிலிர்த்தது. கணவனுக்காகத் தாய்மைத் துயரத்தையே விழுங்கிவிட்டு வருந்தும் அந்தப் பெண் ஒரு தெய்வமாகத் தெரிந்தாள். பெண்களின் தியாகத்துக்கு ஒரு வரம்பில்லையா? ஒவ்வொருத்தியும் ஓர் உணர்ச்சிக் காவியமாகவே பிறந்துவிடுகிறாளே! அவளது பெருந்தன்மைக்குக் கடலை உவமை சொன்னால் கூடப் போதுமா?

''சாவித்திரி! உனக்கு நான் என்னத்தைச் சொல்லட்டும்? இந்தத் துக்கத்தை விழுங்கி நிதானத்துக்கு வரும் துணிவைக் கடவுள் உனக்கு அருளட்டும், அம்மா. உன் அன்பு மனத்துக்குக் கடவுள் ஒரு குறைவும் வைக்க மாட்டார். போய்ப் படு. உன் உடம்பு சீக்கிரமே குணமடைந்து நீ விரும்பும் குழந்தை இன்பத்தை அடைய ஆண்டவன் அருள்வான்!'' என்றாள்.

இதைக் கேட்டதும் சாவித்திரியின் விம்மல் விபரீதமாகப் பெருகியது. ''நான் பாவியம்மா. மறுபடியும் அந்தப் பாக்கியம் எனக்கு ஏற்படக் கூடாதென்பது டாக்டரின் முடிவு!''

செல்லம்மாவுக்குத் திகீர் என்றது. எல்லாம் வல்ல சர்வேசுவரன் இப்படியெல்லாம் துயரங்களை அடர்த்தியாக மெழுகி வைத்து விடுகிறானே! இது என்ன விளையாட்டு? தன் தாயின் இறுதியைச் சந்தித்து விடுவோமோ என்ற துடிப்பில் வசந்தன் படும்பாடு செல்லம்மாவுக்குப் புரிந்தே இருந்தது. அதுவாவது உலக வழக்கப்படி என்றாவது முதியவர் செத்துவிடும் தன்மைப்படி நியாயமாக நடக்கவேண்டிய ஒன்று. இது...? பெற்ற ஒரே மழலை. அதன் பின் வேறு மழலையைக் காணச் சந்தர்ப்பம் தராத நோய். இந்நிலையில் குழந்தையைப் பறி கொடுத்த ஒரு தாய்க்கு இந்த உலகில் என்னதான் மீதி கிடக்கின்றது?

நள்ளிரவில் ஒரு முறை சாவித்திரி வாந்தி எடுத்து விட்டாள். டாக்டர் ஓடி வந்தார். பிராணவாயு சிலிண்டர் உருண்டு வந்தது. ரகசியப் பேச்சுக்களும் பரபரப்பும் ஓங்கின. யாரிடமும் சொல்லிக் கொள்ளாமலேயே சாவித்திரி தன் மன அதிர்ச்சியிலிருந்து மீண்டு கொண்டாள். பொழுது விடிந்த போது 'மாதாஜி, நமஸ்தே' என்ற குரல் எழவில்லை, அவள் செல்லம்மாவுக்குக் கைகூப்பவில்லை. படுக்கை காலியாக இருந்தது. ''இந்த நிம்மதியைத் தவிர வேறு நிம்மதி தர முடியாதப்பா, ராமா!'' என முணுமுணுத்த செல்லம்மாளின் கண்களில் காலியாகக் கிடந்த கட்டில் தென்பட்டது.

(தொடரும்)

# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான ஸெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்... இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினாலும், பெருமிதத்தினாலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக் கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்தினால் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**

புதிய, நவீன காஸ்மெடிக் டின்!







மற்றும் பாமாலிவ் டால்க் டீலக்ஸ் —
மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்புதமான கலவை

PT.G.8 TAM.

# ஓநாய்க் கோட்டை

கதை:
வாண்டு மாமா
சித்திரம்:
ரமணி..


















ஆனால் கந்தனை முன்னேற விடாமல் வழி மறித்தது காட்டெருமை ஒன்று. எத்தனை தடங்கல்கள்?









பாய்ந்து வந்த காட்டெருமையிட மிருந்து ஒதுங்கி ஒரு புறமாக நகர்ந்து சட்டென்று அதன் கழுத்தைக் கட்டிக் கொண்டு.....





தனது பலத்தை முழுவதும் பயன்படுத்தி அதைத் தரையில் மல்லாந்து வீழ்த்தினான் கந்தன் என்ற காளை?

எருமையை வீழ்த்தி விட்டு நிமிர்ந்த கந்தன் தன்னைச் சூழ ஈட்டிகள் பளபளப் பதை அறிந்தான்...




தொடரும்...



**ஆனந்தவல்லி – கிருஷ்ணமூர்த்தி**

ஓய்வுபெற்ற துணை கலெக்டரும், ஈசன் குரூப் கம்பெனிகளின் துணை பொது உறவு அதிகாரியுமான ஸ்ரீ என். வி. சந்திரனின் குமாரன் சிரஞ்சீவி கிருஷ்ணமூர்த்தி (பி. காம்)க்கும், மயிலாப்பூர் என்ஜினீயரிங் காண்டிராக்டர் ஸ்ரீ எஸ். சுவாமிநாதன் அவர்கள் குமாரத்தி செளபாக்யவதி ஆனந்த வல்லிக்கும் சமீபத்தில் மயிலாப்பூரில் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.



**சுசிலா - கல்யாணராமன்**

சீர்காழியிலுள்ள 'டிரக் ஹவுஸ்' உரிமையாளர் ஸ்ரீ ஆர். கிருஷ்ணமூர்த்தி அய்யர் சகோதரர் புதல்வி செள. சுசிலாவுக்கும் மாயூரம் ராஜ் & கோ. உரிமையாளர் சிரஞ்சீவி டி. கல்யாணராமனுக்கும் தஞ்சையில், சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

எங்கள் அழைப்புக்கிணங்கி வருகை தந்து திருமணம் சிறப்பாக நடைபெற உதவிய நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றி.

# உயர்கிறார் உத்பால் தத்

அ. இராமதுரை

இந்தியாவில் மிகச் சிறந்த நாடகத் தயாரிப்பாளர் யார்?

மேற்கு வங்க மாநிலத்தையே தமது ''அங்கார்'', ''கல்லோல்'', ''ஆகயா வியட்நாம்'' போன்ற புரட்சி நாடகங்களால் ஒரு கலக்குக் கலக்கிக் கொண்டிருக்கும் உத்பால் தத்தான்.

மேற்கு வங்க அரசாங்கம் வங்க நாடகத் துறைக்கு ஆற்றிய தொண்டுக்காகப் பட்டமளிக்க முன்வந்தபோது அதனை வேண்டாம் என உதறித் தள்ளிய உத்பால் தத் அஸ்ஸாம் மாநிலத்தின் தலைநகரான ஷில்லாங்கில் 1929ம் ஆண்டில் பிறந்தவர். கல்லூரிப் படிப்புக்காக அவர் கல்கத்தாவில் உள்ள புனித சேவியர் கல்லூரியில் சேர்ந்தபோது தான் அவருக்கு நாடகத் துறையில் ஆர்வம் ஏற்பட்டது. அக்காலத்தில் சேவியர் கல்லூரியில் மாணவர்களே சேர்ந்து நாடக மன்றம் ஒன்றை அமைத்து ஆங்கிலத்தில் பல நாடகங்களை நடத்தினார்கள். அந்த நாடகங்களைக் கண்டு களித்த தத் தாமும் நடிக்க ஆசை கொண்டார். அவர் முதன் முதலில் நடித்தது ஷேக்ஸ்பியரின் ''ஹாம்லெட்.''

இரண்டு ஆண்டுகளுக்குப் பின் உத்பால் தத் கலை உள்ளம் கொண்ட தமது கல்லூரி நண்பர்களைக் கொண்டு ஒரு நாடக மன்றம் நிறுவினார். கல்லூரிப் படிப்பு முடிவடைந்த போதும் அவர்கள் மன்றத்தைக் கலைக்காமல் சுமார் பத்தாண்டுகள் வங்க மொழியிலும் ஆங்கிலத்திலும் பலதரப்பட்ட நாடகங்களை நடத்தி வந்தார்கள்.

1959ம் ஆண்டில் உத்பால் தத் நாடகக் கலையை முற்றும் புரிந்து கொண்ட காரணத்தாலும் தமது விருப்பம் போலப் புரட்சிகரமான கருத்துக்களைத் தமது நாடகங்களில் புகுத்த வேண்டும் என்ற காரணத்தாலும் கல்கத்தாவில் உள்ள மிகப் பெரிய அரங்கமான 'மினர்வா தியேட்டரை'க் குத்தகைக்கு எடுத்துக் கொண்டார். தமது நாடக மன்றத்துக்கு முதன் முதலாக 'லிட்டில் தியேட்டர் குரூப்' என்று பெயரையும் சூட்டினார். அவர், அவர் மனைவி ஸோவா சென், ஒளி அமைப்பாளரான தபாஸ் சென் ஆகிய மூவருமே மன்றத்தின் முக்கிய தூண்கள்.

உத்பால் தத்தின் மிகத் திறமையான டைரக்ஷனில் அவரும் அவரது மனைவியும் பிரதம பாகத்தில் நடித்த ''ஹாம்லெட்'', ''ஜூலியஸ் சீஸர்'', ''ரோமியோ ஜூலியட்'' முதலான நாடகங்கள், ஒன்றன் பின் ஒன்றாக அரங்கேறின. ஆனால் அவருக்குப் புகழ் கொடுத்த நாடகம் ஷேக்ஸ்பியரின் நாடகங்களல்ல; அவரே எழுதி நடித்த ''சாயாநாக்'' ''அங்கார்'', ''கல்லோல்'', ''சூம் கே'', ''சந்திர் கௌடா'' போன்ற நாடகங்களே. அதிலும் குறிப்பாக ''அங்கார்'' சுரங்கத் தொழிலாளிகளின் ஜீவ மரணப் போராட்டத்தை அடிப்படையாகக் கொண்டது—அவருக்கு அழியாப் புகழ் கொடுத்தது. உத்பால் தத்தின் திறமையான டைரக்ஷனும் தபாஸ் சென்னின் அற்புதமான ஒளி அமைப்பும் 'அங்காரை' வங்க நாடக மேடையின் சரித்திரத்திலேயே புகழ் பெற்ற நாடகமாக்கியது. இந்த நாடகம் இரண்டு ஆண்டுகளுக்கு மேலாக கல்கத்தாவில் நிகழ்ந்தது.



படம்:

'குரு' திரைப்படத்தில் ஒரு காட்சி. நடுவே உத்பால் தத்.

நாடக மேடை மட்டுமின்றித் திரை உலகமும் உத்பால்தத்தைத் தன் பக்கமாக இழுத்தது. வங்கத்தின் மிகச் சிறந்த குணச்சித்திர நடிகர்களில் ஒருவரான அவர் இதுவரை ஐம்பது திரைப் படங்களுக்கு மேல் நடித்திருக்கிறார். அது மட்டுமின்றி ''மேக்'', ''சூம் பங்கார் கான்'' என்ற இரு திரைப் படங்களையும் டைரக்ட் செய்தார். இவற்றில் ''சூம் பங்கார் கான்'' 1964ம் ஆண்டில் நடைபெற்ற கானெஸ் சர்வதேச திரைப் பட விழாவில் திரையிடப்பட்டது.

வங்க மொழிப் படங்கள் மட்டுமின்றி இந்தியாவில் ஆங்கிலத்தில் எடுக்கப்பட்ட ''ஷேக்ஸ்பியர்வாலா'' படத்திலும் உத்பால் தத் மிகச் சிறப்பாக இந்திய சமஸ்தானாதிபதி ஒருவராக நடித்திருக்கிறார்.

அத்தியாயம் 21

# அதிகாலையில் ஆலோசனை

மராட்டி தர்பார் என்று மக்களால் அழைக்கப்படும் சிவ சௌதாவின் தென்புறத்தில் ஒரு பெரிய அந்தரங்க மகாலில் துக்கோஜி மன்னரும் அவரது ஆலோசனைக் குழுவினரும் கூடியிருந்தார்கள்.

''வாஹ்வா ராஜ்குமார்! உங்கள் வீரம் வாழ்க! ஒருவராகப் போர் புரிந்து பதினாறு தீவட்டிக் கொள்ளைக்



பொன்னிவனத்துப் பூங்குயில்

கொத்தமங்கலம் சுப்பு

காரர்களைக் கொன்றீர்கள் என்று கேள்விப்பட்டேன். அங்கு அந்தத் தீ பரவாமல் இருந்தால் உங்கள் தீரம் எப்படி உலகுக்குத் தெரிந்திருக்கும்?'' என்று இளவரசரைப் பாராட்டினார் கில்லேதார் சையத் ஜீ. இதைக் கேட்டு ஆலோசனை மண்டபத்தில் குழுமியிருந்த மாவீரர்கள் அனைவரும் களிப்பில் ஆழ்ந்து ஆரவாரம் செய்தார்கள்.

கில்லேதார் சையத்ஜி என்பவர் அரசியல் சதுரங்கத்தில் நிபுணர். அவரைப் படே சாகிப் என்று அழைப்பார்கள். அவருடைய சகோதரர் காசிம் அவர்களைச் சோட்டே சாகிப் என்பார்கள். இருவரும் ஏகோஜி என்கிற வெங்காஜி ராஜாவோடு தஞ்சைக்கு வந்த விஜயபுரி சுல்தானின் மந்திரிகளின் வழியில் வந்தவர்கள். ஆதலால், அவர்களுக்குத் தஞ்சை அரசியலில் செல்வாக்கு அதிகம். படே சாகிப் மனம் வைத்தால் ஆண்டியையும் அரசனுக்கிவிடுவார் என்பார்கள். அரண்மனைக் கோட்டை காவல் பொறுப்பு அவரிடம் இருந்ததால் அரண்மனை ஊழியர்களிடையே அவருக்கு



மிகுந்த மரியாதை உண்டு. அவர் அரசியல் காரியங்களில் அதிகமாக ஈடுபடுவது இல்லை. ஈடுபட்டாலோ ஏற்படும் தொல்லை. பதவிப் பித்தர்கள் எல்லாம் படே சாகிப்பின் காலடியில் கிடப்பார்கள். இதைத் தவிர அவர் மனத்தில் பீஜப்பூர் சுல்தானே ஆள வேண்டிய நாட்டை மராட்டியர்கள் ஆளுகின்றனரே என்ற மனத்தாங்கலும் உண்டு. அவருடைய தம்பி சோட்டா சாகிப் இதற்கு நேர்மாறானவர். எம்மதமும் சம்மதம் என்று நினைக்கக் கூடியவர். இந்து, முஸ்லிம் இருவரும் ஒன்று என்று கருதக் கூடியவர்.

தஞ்சை அரசில் உள்ள தர்க்காக்களையும், முஸ்லிம்களின் நலன்களையும் பாதுகாப்ப தில் அக்கறை உடையவர். அண்ணனின் செயல்கள் அவருக்குப் பிடிப்பதில்லை.

இருவரிடமும் துக்கோஜி அரசருக்கு மிக்க மதிப்பு உண்டு. தன் மகனைப் படே சாகிப் பாராட்டியதில் மகிழ்ந் தார். ஆனால் அந்தச் சபாஷுக்குள் எத்தனை சதிகள் இருக்குமோ என்றும் அஞ்சினார். இருப்பினும் அரசவை முறையை ஒட்டித் தம உணர்ச்சிகளை வெளிக் காட்டாமல், அவர் பின் வருமாறு பகர்ந்தார்.

''கில்லேதார் அவர்களே! என் மைந்தனைத் தாங்கள் பாராட்டுவதில் எனக்கு மகிழ்ச்சி ஏற்படவில்லை. நாம் இங்கு இல்லாத போது நடந்த இக் கொடிய செயலை நீங்கள் தடுத்து நான் உங்களைப் பாராட்டி யிருந்தால் என் களிப்பே வேறுவிதமாக இருக்கும்'' என்றார் அரசர். ஏற்கனவே சிவந் திருந்த கில்லேதாரின் முகம் அந்தக் குற்றச்சாட்டில் மேலும் சிவந்தது. ஆனால் அவர் தம் ஆத்திரத்தை வெளிக் காட்டாமல் சிரித்துக் கொண்டார்.

''அரச பெருமானே! அரண்மனைக் குள் இது நிகழ்ந்திருந்தால், நான் தடுத் திருப்பேன். ஆனால் இது எனது எல் லைக்கு அப்பால் நடந்த நிகழ்ச்சி. நான் இதில் தலையிட்டு இருந்தால் பேஷ்வா ஆனந்தராவ் அவர்கள் அதை விரும்ப மாட்டார்கள் என்று அஞ்சினேன்'' என்றார் அவர். உடனே பேஷ்வா ஆனந்தராவ் எழுந்தார். ஆனந்த ராவ் அவர்களின் இயற் பெயர் ஆனந்த ராய மகி என்பதாகும். இவர் ஓர் அந்தணர். புல் பிடிக்கும் குலத்தில் பிறந்து, வில் பிடித்த துரோணர், கிருபர், அசுவத் தாமாவைப் போன்றவர் இவர். இவர் ஒரு கையில் தருப்பையைப் பிடிப்பார். மற்றொரு கையில் வீர வாளைப் பிடிப் பார். இரவில் ''ஆசுவலாயன'' மகரிஷி யின் உபதேசங்களை எழுதுவார்; பகலில் ஆவேசமாகப் போர் புரிவார். சமித்துக் களையும் பொறுக்குவார்; தலைகளையும் வீழ்த்துவார். சமர் புரிவார்; சன்யாசி போல் வாழ்வார். ஒரு கரத்தால் தரு மத்தையும், மற்றொரு கரத்தால் தாய் நாட்டையும் காப்பார். இவர் அடைந்த வெற்றிகள் பல. ஆனால் அதில் முக்கிய மானவை இவர் எழுதிய ''ஆஸ்வலா யன சூத்ரவ்ருத்தி'' என்னும் நூலும், ''வித்யா பரிணயம்'' என்ற நாடக முமே ஆகும். ஷாஜி அரசர் காலம் முதல் ஷாஜி, சரபோஜி, துக்கோஜி ஆகிய மூவருக்கும் தளவாய் ஆகவும், தர்மாதிகாரியாகவும் இருக்கும் இம் முதியவர் பேச எழுந்ததுமே, சபையில் ஓர் அமைதி ஏற்பட்டது. அரசரை வணங்கிவிட்டு, ''கில்லேதார் அவர்கள் சொல்லுவது மிகவும் சரியே. ஒவ் வொருவருக்கும் ஒரு பொறுப்பு என்று ஏற்பட்டு இருக்கும் பொழுது அதில் பிறர் தலையிடுவது சரியல்ல. அதிலும் நெருப்பில் தலையிடுவது சரியே அல்ல. நல்ல வேளை! காற்றடிக்காமல் கடவுள் காப்பாற்றினார்'' என்றார் அவர்.

''எனக்கு நீங்கள் சொல்வது விளங்க வில்லை'' என்றார் கில்லேதார்.

''கீழ்க் காற்று அடித்திருந்தால், கில் லேதார் திறமையைக் காட்டியிருப் பீர்கள். கோட்டைக்குள் தீப்பிடித்தால் தானே உங்கள் திறமை வெளியாகும்?'' என்றார் பேஷ்வா. இருவரும் ஒருவரை ஒருவர் மறைமுகமாகத் தாக்கிக் கொள் வதைக் கண்டு மன்னரின் விழிகளில் தீப்பொறிகள் பறந்தன. இந்த உட் பகையை அவர் விரும்பவில்லை. ஆயினும், அடக்கம் மிகுந்தவர் ஆதலால் அதைக் கண்டு கொள்ளாதவர் போல் பின்வரு மாறு உரையாற்றினார். ''தஞ்சைப் பேரரசின் பெருமைக்குக் காரணம் நான் அல்ல, பேஷ்வா ஆனந்தராவ் அவர்களும் அல்ல. கில்லேதார் சாகிப் அவர்களும் அல்ல. அன்னை காவிரிதான் அதற்குக் காரணம். அவள் கற்பகத் தருவைப் போல் குடகிலே வேரூன் றிக் குணசேகரத்தில் கிளை விட்டுத் தஞ்சாவூர்ச் சீமையில் பல கிளைகளாகப் பிரிந்து ஓடுகின்றாள். வேரும், அடிமரமும் போல் பிற நாடுகளில் விளங்கும் அவள் இந்தச் சோழ நாட் டில்தான் பூவும், காயும், கனியும் பொலிவுடன் தருகின்றாள். மரத்தின் பெருமை வேரிலும் அல்ல. அடிமரத் திலும் அல்ல. அதன் கிளைகள் தரும் பலன்களைப் பொறுத்ததுதான். அதன் கிளைகளின் மேல்தான் கிளிகளும், குயில் களும், மயில்களும் தங்குகின்றன. நம் நாட்டில் கலை வளரும், கோயில் களும் செழித்திருப்பதற்குக் காரணம் காவிரியின் கிளைகள்தாம். பிறர் கண் களுக்கு அவள் காவிரியாகத் தோற்றம் அளித்தாலும், நம் கருத்துக்கு அவள் கரிகால் சோழ மன்னனின் கைவிரல்க ளாகவே காட்சி அளிக்கின்றாள். விரல்கள் இல்லையேல் கைகள் இருந்து பயன் இல்லை. ஐந்து விரல்களும் ஐந்து நதிகளாகிக் காவிரி, வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டி, வடவாறு எனப் பிரிந்து அன்னையின் ஐந்து விரல் களைப் போல் மக்கள் அனைவருக்கும் அமுது ஊட்டுகிறாள். ஐந்து மட்டுமா? இங்கு கரிகால் சோழ மன்னர் ஆறு முகப் பெருமானைப் போல் பன்னிரு கரங்கள் உடையவராக அறுபது

விரல்கள் உடையவராகத் தோற்றம் அளிக்கின்றார். அத்தனை கிளை நதிகள் அவரது கிருபையைப் போல் இங்கு தான் பெருகி ஓடுகின்றன. ஓடம் போக்கி, கோரையாறு, பாமினியாறு அரிசிலாறு, அரிச்சந்திரா நதி, திருமலைராயன், முடிகொண்டான், பித்தாறு, வளப்பாறு என்று எத்தனை பெயர்களைத் தான் அவள் தாங்கி நிற்கின்றாள். அவளது கிளைகளின் பெயரைச் சொல்லியே அன்னை காவிரிக்கு அஷ்டோத்திர அர்ச்சனைகள் செய்து விடலாம். அவளை வணங்குவதுதான் தஞ்சை அரசர்களாகிய எமது பணி. இதற்கு எவரேனும் இடையூறு செய்வார்களேயானால் அவாகள் எமது எதிரிகள். காவிரியை நாம் காவல் காத்து வந்தால், நமது குடிமக்களை அவள் காப்பாற்றிக் கொள்ளுவாள். இதை அறிந்த நாயக்க மன்னர்களும், பல கால்வாய்களை இங்கு அமைத்திருக்கிறார்கள்.

பட்டீசுவரத்துக்கு நாம் விஜயம் செய்யும் பொழுதெல்லாம், அங்கு கம்பீரமாகக் காட்சியளிக்கும், சோழவள நாட்டு மக்களின் வணக்கத்துக்கு உரிய கோவிந்த தீட்சிதரின் சிலையை நாம் உற்று உற்றுப் பார்ப்போம். அவர்கள் வெட்டிய காவிரி கால்களையும், கட்டிய திருக்குளங்களையும், கவினுற அமைத்த பாடசாலைகளையும் எண்ணிப் பார்ப்பேன். உங்கள் அன்புக்கும், மரியாதைக்கும் உரிய மன்னரான நாம், ஆம், இந்தத் துக்கோஜி கோவிந்த தீட்சிதரின் சிலைக்கு முன் நின்று 'நான் அரசனாக இருந்தது போதும், உங்களைப் போல் ஓர் அமைச்சராக ஆகுமாறு எனக்கு அருளுங்கள்' என்று வேண்டிக் கொள்வேன். களிப்பையே அருளும் காவிரியாலும் நமது நாட்டுக்குக் கஷ்டங்கள் உண்டு. அவள் சீறிவிட்டால் சோழவள நாடு மாறிவிடும். மற்ற நிலங்களைக் காட்டிலும் இந்நாடு சிறிது தாழ்வாக இருப்பதால்தான், இங்கு காவிரி கடலில் புகுகிறாள். காவிரியில் வெள்ளம் வந்தால் சோழ நாட்டின் களஞ்சியங்களை அது கழுவி விட்டுவிடும். கடல் காற்றும் இங்குதான் அதிகம். புயலும், வெள்ளமும் நம்மைத் தாக்காமல் காக்கவே, சோழ அரசர்கள் அத்தனை கற்கோயில்களையும் காற்றால் அசைக்க முடியாத திருமதில்களையும் இங்கு கண்டார்கள். சென்ற ஒரு வாரமாகவே எனக்குக் காவிரியைப் பற்றிப் பல செய்திகள் வந்தன. கல்லணையில் யாரோ சதி செய்யப் போகிறார்கள் என்று அறிந்தேன். காவிரிப் பகை கடும் பகை. நம் வணக்கத்துக்குரிய தந்தையார் காலத்திலும், பிறகு நமது மூத்த சகோதரர்களாகிய ஷாஜி மகாராஜா அவர்களும், சரபோஜி மகாராஜா அவர்களும் ஆட்சி நடத்திய காலத்திலும், கல்லணை பல முறை நம் எதிரிகளால் வெட்டி விடப்பட்டு, வெள்ளத்தால் நம் நாடு இன்னலுக்காளானதை இங்குள்ளவர்கள் மறந்திருக்க மாட்டார்கள். இதற்காக நமது மதிப்புக்குரிய தளவாய் ஆனந்த ராவ் அவர்கள் திருச்சியின் மீதும், பிறகு மைசூரின் மீதும் படை கொண்டு சென்றார்கள். அவர்களது கரம் கல்லணையைக் காத்தது'' என்று மன்னர் பிரான் உரைத்தவுடன், அவையில் உள்ள எல்லோரும் ஆனந்தராவ் அவர்களை நன்றிப்பெருக்குடன் பார்த்தனர். ஆனந்த ராவ் அவர்களோ, ''அது இறைவன் எனக்கு இட்ட பணி'' என்று அடக்கத்துடன் வானை நோக்கி, இரு கரம் கூப்பி வணங்கினார். அரசரின் கடைக் கண்கள் இந்தக் காட்சியைக் கண்டு களி பொங்கியது. மேலும் உரையாற்றினார்.

''அதை உடைத்து விடுவார்களோ என்று அஞ்சியே இரு தினங்களுக்கு முன் நானும் பேஷ்வா அவர்களும் அங்கு எதிர்பாராதவிதமாகச் சென்று அதன் காவலைப் பலப்படுத்தினோம். கல்லணை நம்மை விட்டுச் சற்றுத் தள்ளி இருப்பதாலும், நாயக்க மன்னர்களின் எல்லைக்கு அருகில் இருப்பதாலும், நாயக்கர்களுக்கும், நமக்கும் இடையே எல்லைத் தகராறு இல்லாமல் இருக்க வேண்டும் என்று, அதற்கான பல வழி வகைகளைத் தீவிரமாக யோசித்தும் வருகின்றோம். இந்த நேரத்தில் வடவாற்றின் மதகை யாரோ உடைத்திருப்பது நமக்கு ஆத்திரத்தை உண்டாக்குகின்றது. நேற்று இரவு நாம் தென்பிறம்பூருக்கு விரைந்து சென்றோம். அங்கு வடவாற்றின் மதகில் காவல் காத்த வீரர்களில் ஒருவர் கொல்லப்பட்டிருந்தார். விழாவுக்காக அடைத்திருந்த வடவாற்றின் மதகு கயவர்களால் வெட்டிவிடப்பட்டிருந்தது. இது வேண்டும் என்றே செய்த செயல். நாம் அதை அடைக்க ஏற்பாடு செய்து விட்டு வருவதற்குள் இங்கு தீ வைக்கப்பட்டிருந்தது. இந்த விபத்துக்கள் தெய்வாதீனமாக ஏற்பட்டவை அல்ல. அரசியல் சம்பந்தப்பட்டவை: ஆதலால் மக்களுக்கு ஏற்பட்ட நஷ்டங்கள் எல்லாவற்றுக்கும் நமது அரசே பொறுப்பேற்க வேண்டும் என்று நாம் ஆணையிடுகின்றோம். கில்லேதார் அவர்களும், பேஷ்வா அவர்களும் குற்றவாளி யார் என்பதைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் ஒன்று சேர்ந்து ஈடுபட்டிருப்பீர்கள் என்று

நம்புகிறேன். இந்தத் தஞ்சை அரசில் காவிரியைக் காப்பதை, கடமையாகக் கொள்ளாதவர்கள், எவரேனும் இருந்தால், அவர்கள் நீரில் கை நனைக்கத் தகாதவர்கள். சோற்றில் கைவைக்கத் தகாதவர்கள்.

''இளவரசர் பிரதாபசிம்மர் இரண்டு நாட்களுக்கு முன்தான் இங்கு வந்தார். நாளை, மகாதேவ் பட்டணம் சென்று விடுவார். அவரைப் பாராட்டுவதைக் காட்டிலும், மக்களைப் பாதுகாப்பதைத்தான் அவரும் விரும்புகிறார். அவருடைய விருப்பத்தை நீங்கள் நிறைவேற்றுவீர்கள் என்று நம்புகின்றேன்.''

இரவு தஞ்சை பெரிய கோவிலில் அர்த்தஜாம மணி அடித்த பிறகு சிவ சௌதாவின் தென் பாரிசத்தில் இரண்டு உருவங்கள் சால்வைகளால் முக்காடிட்டுக் கொண்டு வந்தன. அதில் ஓர் உருவம் கையில் வெள்ளியால் ஆகிய தீப்பந்தம் ஒன்றை வைத்திருந்தது. அந்த இருவரில் முதியவர் தெற்குச் சுவரின் அருகில் சென்றார். திராட்சைப் பழக் குலைகளைப் போல் அங்கு சுவரின் மேல் நெடுகிலும் சுதை வேலை செய்யப்பட்டிருந்தது. அவற்றில் ஒன்றுபோல் இருந்த பழங்களில் ஏதோ ஒன்றை முதியவர் அமுக்கினார். பழம் பிதுங்கவில்லை; பாதை திறந்தது. சுவர் விலகி வழி விட்டது. இருவரும் உள்ளே நுழைந்தனர். மறுமுறை அவர் ஒரு 'சூத்திரத்தை' உள்ளிருந்து அமுக்கவே கதவு சாத்திக் கொண்டது. இளைஞரிடம் இனி ரோஷனியை ஏத்தலாம் என்று மகாராஷ்டிர மொழியில் பகர்ந்தார் முதியவர். இளைஞர் தம் கையில் இருந்த சிக்கிமுக்கிக் கல்லைத் தட்டுவதற்குத் தயங்கினார். ''ஒலி வெளியே கேட்காது. தட்டலாம்'' என்றார் முதியவர். பந்தம் ஏற்றப்பட்டது. வந்தவர்கள் பிரதாப சிம்மரும், அவருடைய தந்தையாரும் தான். அந்தச் சுரங்க பாதை, நெடுந்தூரம் சென்றது. அப்படி ஒரு கட்டடம் இருப்பது வெளியே யாருக்கும் தெரியாது. என்றாலும், அது மிகவும் சுத்தமாகவே வைக்கப்பட்டிருந்தது. பிரதாப சிம்மர் வியப்புடன் வாய் திறவாமல் முன்னே நடந்தார். ''மகனே! நீ என்ன செய்கிறாய் தெரியுமா?'' என்றார் மன்னர். பிரதாபசிம்மருக்கு ஒன்றும் புரியவில்லை. பதில் பேசாமல் நின்றார். ''உனக்குப் புரியவில்லையா? அல்லது புரிந்துதான் பேசாமல் இருக்கிறாயா? எனக்கு வழி காட்டுகிறாய் நீ. மைந்தர்கள் தந்தைக்கு வழிகாட்டியாக விளங்க வேண்டும். என் கண்களில் ஒளி இருக்கிறது. இருப்பினும் இருளில் நான் சிக்கி இருக்கும் பொழுது உன் வெளிச்சம் எனக்குத் தேவைப்படுகிறது. இன்று நீ என் கண்ணின் மணியாகவே விளங்குகிறாய்'' என்று கூறிவிட்டுத் தந்தை அதற்கு மேல் பேச முடியாமல் தயங்கினார். ''பிதாஜி! உங்கள் திருவடி தூசிக்கும் இணை இல்லாதவன் நான். என்னைக் கண்ணின் மணி என்று நீங்கள் புகழ்வது சரியல்ல. நான் அவ்வாறு புகழ என்ன பெரும் செயல் ஆற்றிவிட்டேன்'' என்றார் மகன்.

''நீ இதுவரை செய்ததற்காக அல்ல. இனி மேல் செய்யப் போவது நிரம்ப இருக்கிறது. உன் அன்னை உன்னிடம் இருளில் விழித்திரு என்று சொன்னாள் அல்லவா? இந்த அரண்மனையின் இருட்டை நீயும் பார்த்தாயல்லவா?''

''ஆம், தந்தையே !''

''உன் அன்னை உன்னை ஒதுங்கி இருக்கச் சொல்லுகின்றாள். நானோ உன்னிடம்




''ஒரு நாத்துக்கு வெத்திலே, சீவல், புகையிலே போட்டுக்குங்கோ!''

! ! !

''நான் மட்டும் புகையிலையைப் போட்டுக் கொண்டு தனியாகத் திண்டாடணுமேன்னுதான் உங்களையும் சேர்த்துண்டேன்!''

பெரிய பொறுப்பை ஒப்படைத்திருக்கிறேன். இதை நீ மனப்பூர்வமாகச் செய்வாய் அல்லவா?'' என்று தந்தை வினவவே பிரதாபசிம்மர் மிகுந்த வினயத்துடன் ''நான். பித்ருவாக்கியப் பரிபாலனம் செய்த இராமரை வணங்குபவன்'' என்றார்.

''பிரதாபா, நான் தசரதனைக் காட்டிலும் இரண்டு பங்கு அதிகமானவன்'' என்றார் அரசர்.

எதற்காக இவ்வாறு கூறுகிறார் என்று பிரதாபசிம்மர் தந்தையின் முகத்தை நோக்கினார். ''அவருக்கோ மூன்று பட்டமகிஷிகள்தாம். எனக்கு அறுவர். இதைத் தவிர ஆசை மனைவிகளும் அதிகம். அரசர்களுக்கு அந்தரங்கமானவர்கள் தேவை. பிள்ளைகளால்தான் அது முடியும். புத்திரப் பேற்றை விரும்பியே அரசர்கள் அதிகமாகத் திருமணம் செய்து கொள்வார்கள். முக்கியமான விஷயங்களைப் புத்திரர்களிடம்தான் ஒப்படைப்பார்கள். இன்னும் இந்து அரசர்களில் புத்திரர்கள் தந்தைக்கு நேர்மாறாகத் திரும்பியது இல்லை....''

''மகாராஜா! தங்கள் திருவுள்ளம் எனக்குப் புரியவில்லை'' என்று தணுக்குற்றுக் கேட்டார் பிரதாபசிம்மர்.

''ஒன்றுமில்லை. மொகலாயப் பரம்பரையில் பலர் மைந்தர்களுக்குச் சத்துருவானார்கள். தந்தையைச் சிறையில் அடைத்த மைந்தர்களும் உண்டு. மராட்டிய மன்னர்களில் யாரும் இதுவரை அவ்வாறு தோன்றவில்லை.''

''அதைத் தாங்கள் சொல்லும்படியான சந்தர்ப்பம் ஏதேனும் இப்போது இங்கு தோன்றிவிட்டதா?''

''அல்ல மகனே! தோன்றினாலும் தோன்றலாம். அதனால் இப்பொழுதே என் மகனைக் கைக்குள் போட்டுக்கொள்கிறேன்'' என்று தம் மகனைத் தம் கையால் தழுவிக் கொண்டார் மகாராஜா. உணர்ச்சிப் பெருக்கில் அவர் நாத் தழுதழுத்தது. இன்பப் பெருக்கில் இளவரசர் பதுமை போல் நின்றார்.

''பிரதாபா! 'முல்லை வேந்தன்' விஷயத்தில் எனக்குப் பல ஐயங்கள் எழுகின்றன. அவன் பகையாளியாகவும் இருக்கலாம். அவனுக்கு நம் கோட்டைக்குள்ளேயே சலுகை இருக்கிறது. பூசாரி மீது பாய்ந்த விஷ அம்பும், கொள்ளைக்காரன் மீது எரியப்பட்ட குத்துவாளும் தடயங்களை அழிக்கவே ஏவப்பட்டவை. அவன் யார் என்பதை நானோ அல்லது நீயோதான் கண்டுபிடிக்க வேண்டும். அதனால் தான் உன்னிடம் அதை ஒப்படைத்திருக்கிறேன்'' என்றார் அரசர்.

தீ வத்தி அணைக்கப்பட்டது. வேறு ஒரு கதவைத் திறந்தார் மன்னர். இருவரும் ராஜகோபாலஸ்வாமி கோயிலின் குடவரை வாசல் வழியே வெளியே வந்தார்கள். அங்கு ஒரு சிறிய கோயில், அதிலே வீர மாகாளி. ஆள் உயரத்துக்கு நின்றாள். இருவரும் காளி மாதாவைக் கரம் கூப்பி வணங்கினர். ''மகனே! அதைப் பார்!'' என்று ஆள்காட்டி விரலால் காளி தேவியின் காலடியில் இருந்த ஒரு சிலையைக் காட்டினார் மன்னர். பிரதாபசிம்மர் பார்த்தார். குபீரென்று அவர் உடம்பில் இரத்தம் உறைந்தது போல் ஓர் உணர்ச்சி ஏற்பட்டது. ஆம், அது ஒரு தலையின் சிலை. சர விளக்குகளின் வெளிச்சத்தில் சிரித்த முகத்தோடு அந்தத் தலை காட்சியளித்தது. அரசர் பேசினார்: ''மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை என்நோற்றான் கொல் எனும் சொல்''—இந்தப் பிள்ளையைப் பெறத் தகப்பன் என்ன புண்ணியம் செய்தானோ என்று உலகம் பிள்ளைகளைப் பாராட்ட வேண்டும். அம்மாதிரி ஒரு மைந்தனை இந்தத் தஞ்சை பாராட்டியது. அவன்தான் விஜயராகவ நாயக்கனின் மகனாகிய மன்னார்தாசன் — போர்க்களத்தில் தந்தையோடு நின்று மதுரைப் படையுடன் போரிட்டுத் தந்தையின் உயிரைக் காக்கத் தன்னைப் பலி கொடுத்த மைந்தன் அவன். விஜயராகவ நாயக்கனின் தலையைக் கொய்து எதிரிகள் மதுரைக்குக் கொண்டுபோய் விட்டார்கள். ஆனால் மைந்தனின் தலையைத் தஞ்சை மண்ணிலேயே உருள விட்டு விட்டார்கள். யாரோ ஒருவர் அந்த வீர மகனின் தலையை எடுத்துக் கொண்டு வந்து இவ் வீரமாதாவின் திருவடிகளில் வைத்தார். அதன் நினைவாகவே இந்தச் சிலையை நம் மூதாதையர்கள் அமைத்தார்கள். மைந்தன் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு உதாரணம் இந்தச் சிலை. சிலைகளில் இது தலையாய சிலை மகனே! இனி சொல்ல எனக்கு நாக் குழறுகிறது. அன்னையை வணங்கு. அந்த முல்லை வேந்தன் யாராய் இருந்தாலும் சரி. அவனை வென்று வெற்றியுடன் வா!'' என்றார் அரசர். பிரதாபசிம்மர். காளிதேவியின் முன் மண்டியிட்டு வணங்கினார். அவர் கண்கள் அந்த மன்னார்தாசின் தலையின் மீதே இருந்தன. அப்போது அவர் தலையின் மேல் தந்தையின் கண்ணீர்த் துளிகள் பொலபொலவென்று சிந்தின. **(தொடரும்)**




ப்ரெஸ்டீஜ் ப்ரெஷர் குக்கர், எல்லா உணவுப் பொருள்களின் இயற்கை மதிப்பும் இன்சுவை நறுமணமும் வீணாகாமல் பாதுகாக்கிறது: குக்கரைத் திறக்காதிருக்கும் பட்சத்தில், உணவைத் தயாரித்த பிறகு குறைந்த பட்சம் 2 மணி நேரம் வரையில் உணவைச் சூடாக வைத்திருக்கிறது.







சாதாரணமாக ஆவதைவிடப் பாதி நேரத்தில் உணவு தயார்! எரிபொருள் செலவிலும் 80% மிச்சம்! மேலும், நீராவியில் வேகும் உணவு ஆரோக்கியமான உணவு!

ப்ரெஸ்டீஜ் ப்ரெஷர் குக்கர் வாங்குங்கள்: குடும்பத்தின் அளவுக்கேற்றபடி தேர்ந்தெடுக்க 5 மாடல்கள் உள்ளன.

**PREETT** ப்ரீத் சமையல் பாத்திரங்கள்
சமையலறைப் பொக்கிஷங்கள்.



தயாரிப்பாளர்கள்:
**டிடி (ப்ரைவேட்) லிமிடெட்,**
பெங்களூர்-16.

முன் காலத்தில் புயல் காற்றுகளுக்குக் கிறிஸ்தவ மதத் துறவிகளின் பெயர்களை வைப்பது வழக்கம்.

உதாரணமாக 1825ம் ஆண்டில் ஏற்பட்ட உலகப் பிரசித்தமான புயலுக்கு 'புனித ஆனு புயல்' என்றும், 1876ல் வீசிய ஒரு புயலுக்கு 'புனித பிலிப்' என்றும் பெயரிட்டார்கள். நாளாவட்டத்தில் 'புனித முதலாம் பிலிப்' என்றெல்லாம் பெயர் கொடுத்துப் பலவகைக் குழப்பங்கள் ஏற்பட்டன.



## புனிதமான புயல்கள்

காலப் போக்கில் எளிதில் உச்சரிக்கும்படியும் சட்டென்று புரியும்படியும் இருக்க வேண்டுமென்று பெண்களின் பெயர்களாகப் பார்த்து வைக்கத் தொடங்கினார்கள். அவைகளையும் கண்டவர்கள், கண்டபடி இஷ்டப்பிரகாரம் நாமகரணம் செய்யாமல் பருவநிலை ஆராய்ச்சி நிலையங்கள், அல்லது கப்பல், விமானப் படையினர் மட்டுமே அந்த உரிமையைப் பெற்றிருக்கிறார்கள். இப்போதுள்ள சில புயல்களின் பெயர்கள்: ஹெலன், லீலா, மில்லி, எல்லா, டெய்ஸி.

ஆதாரம்: பாப்புலர் சயன்ஸ்
தகவல்: 'ஜாய்ஜூ'

## மிருகங்களின் அனுதாபம்



போலந்து தேசத்தைச் சேர்ந்த பிரபல சர்க்கஸ் வித்தைக்காரி உயரத்தில் கம்பி மேல் சைக்கிள் விட்டுக் கொண்டிருக்கும் போது தவறி விழுந்து இறந்து விட்டாள். இதை அறிந்த சர்க்கஸ் மிருகங்கள் — சிங்கம், கரடி, புலி, குரங்கு யாவும் பல நாட்கள் வரை ஆகாரமே எடுக்கவில்லை.... சோர்ந்து முடங்கியே கிடந்தன.

தகவல்: 'ரமன்'
ஆதாரம்: 'லிஸ்னர்'

**காதலி:** *அத்தான்! நமது காதல் அவ்வளவுதானா? நான் நடுத்தெருவிலே நிற்க வேண்டியதுதானா?*

**காதலன்:** *அய்யோ, நடுத்தெருவில் நிற்க என் அப்பா ஒருபோதும் அனுமதிக்க மாட்டார். அவர் டிராபிக் போலீஸ் காரராயிற்றே !*

— மு. சு. தியாகராசன்



தமிழ் மறையாகிய திருக்குறளுக்குப் பத்துப் பெயர்கள் எப்படி உண்டோ, அப்படியே முஸ்லிம்களின் வேதமாகிய குர்ஆனுக்கும் பத்துப் பெயர்கள் உண்டு. அவையாவன:




## பத்துப் பெயர்கள்

1. குர்ஆன்: ஓதப்பட்டது: ஓதவேண்டியது.
2. புர்கான்: மெய்யையும் பொய்யையும் வேறு படுத்துவது.
3. ஹுதா: வாய்மையான வழியைக் காட்டுவது
4. ஹிக்மத்: ஞானக் களஞ்சியமாக மிளிர்வது.
5. ரூஹ்: உயரிய உயிரூட்டுவது.
6. ஷிபா: நோயை ஓட்டவல்லது.
7. ரஹ்மத்: அருள் கொடையாக மிளிர்வது.
8. ஹக்: உண்மையை நிறுவுவது.
9. நூர்: ஒளியைக் காட்டுவதும், ஊட்டுவதும்.
10. உம்முல் கிதாப்: அனைத்து நூல்களின் அன்னையாக விளங்குவது.

ஆதாரம்: 'இந்திக்கும் திருமறை' என்னும் நூலுக்குப் பேராசிரியர் அப்துல் கபூர் எழுதிய முன்னுரை. எடுத்து எழுதியவர்: 'மகரம்'

## வெள்ளையான குறை!

வீட்டுச் சொந்தக்காரர் ஒருவர், குடியிருப்பவரைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு குறைப்பட்டுக்கொண்டார்.

"ஆசாமி சரியாக வாடகை தருகிறார். வீட்டைப் பழுதுபார்க்கச் சொல்வதில்லை. வருடா வருடம் வாடகை ஏற்றினாலும் வாயைத் திறப்பதில்லை. இருந்தாலும் ஒரே ஒரு கெட்ட பழக்கம். 'ஐந்து வருடங்களுக்கு ஒரு முறை 'வெள்ளையடித்தால் பரவாயில்லை' என்று முணுமுணுக்கிறார்.

-முகிலன்





# 1000 கோடி வரம்பைக் கடந்து முன்னேறும் சாதனை

## ஸ்டேட் பாங்கின் டெபாசிட்டுகள் இன்று 1000 கோடிக்கும் மேல்.

ஆண்டுதோறும் ஸ்டேட் பாங்கின் பொறுப்பிலே தங்கள் சேமிப்புக்களை ஒப்படைப்போர் ஆயிரமாயிரம். மொத்தத் தொகையாக இன்று 1000 கோடி ரூபாய்க்கும் மேற்பட்டுள்ள பொறுப்பு அது. தொழில்துறைக்கும், விவசாயத்திற்கும் ஸ்டேட்பாங்க் மேன்மேலும் அதிக அளவில் உதவச் செய்துவரும் தூண்டுகோல். பாரத நாட்டில் பல கோடி மாந்தர் வாழுமிடத்திற்கு ஸ்டேட் பாங்கை வரவழைத்து நிறுத்தியுள்ள சக்தி, எல்லாவற்றிற்கும் மேலாக, பற்றுதலுக்கும் நம்பிக்கைக்கும் ஒரு சின்னம். தங்கள் பாங்க் என்ற உணர்வோடு மக்கள் வைத்துள்ள நம்பிக்கை அது.

**சேவை புரிவதற்கே ஸ்டேட் பாங்க்**

S 394 TM



# என்றோ பிறந்தார் இன்றும் வாழ்கிறார்!





“இந்தியன் என்று சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்ளுகிறானோ அப்போதுதான் அவன் சுய மரியாதையுடன் தலைநிமிர்ந்து நிற்க முடியும்” என்று கூறியவர் இன்றைக்கு நூறு ஆண்டுகளுக்குமுன் பிறந்த கோத்ரெஜ் அவர்கள்.

ஸ்ரீ ஏ. பி. கோத்ரெஜ் இந்தியாவின் அரசியல் சுதந்திரத்துக்கு மட்டுமல்ல; இந்தியாவின் பொருளாதார சுதந்திரத்துக்காகவும் பாடுபட்டவர். அரசியல் சுதந்திரம் பெற்றும் பொருளாதார ரீதியில் அடிமைகளாக இருப்பதில் பயனில்லை என்பதைத் தீர்க்கதரிசனத்துடன் உணர்ந்திருந்தவர்.

அந்த நாட்களில் அவர் மகாத்மாவின் ஹரிஜன நிதிக்காக மூன்று லட்சம் ரூபாய் கொடுத்தார். உடனே பிரிட்டிஷ் அரசாங்கம் அவரைக் குறித்து எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று தீர்மானித்து விட்டது. ஆனால் மக்கள் இதற்காகவே அவரிடம் அன்பு செலுத்தினார்கள். முன்னைப்போதையும்விட அவர் மிகப் பிரபலமானார்.

கோத்ரெஜ் வழக்கறிஞராக விளங்கப் பட்டம் பெற்றிருந்த போதிலும் தொழில் துறையில் இந்தியா அடைய வேண்டிய மகத்தான முன்னேற்றங்களை மனத்தில் கொண்டிருந்தபடியால் அதற்குத் தமது பங்கைச் செய்யத் தீர்மானித்து வக்கீல் தொழிலை உதறிவிட்டார். 1897ல் இருபது ரூபாய் வாடகைக்கு ஒரு ‘ஷெட்’டை எடுத்துக்கொண்டு அதில் பூட்டுகள் தயாரிக்கும் தொழிலை ஆரம்பித்தார். கோத்ரெஜ் பூட்டு இன்று எவ்வளவு பிரசித்தம்! இன்னும் கோத்ரெஜ் பீரோ, சோப்பு, டைப்ரைட்டர் முதலியவற்றை இன்று அறியாதார் யார்?

இந்தியாவிலிருந்து அயல்நாடுகளுக்கு மூலப்பொருள்களை எடுத்துச் சென்று அவற்றைக் கொண்டு புதுப் பொருள்களைத் தயாரித்து அவற்றை நமக்கே திரும்பவும் விற்கும் மேனாட்டினரின் சாமர்த்தியத்தைப்பற்றி அந்நாட்களில் எடுத்துச் சொல்லி ‘நாம் ஏமாந்து போகக் கூடாது’ என்றும் மக்களை விளம்பரங்கள் மூலம் எச்சரித்தார் கோத்ரெஜ். சுதேசிப் பற்றை வளர்த்தார்.

1930ல் மேல்நாட்டுப் பொருளாதாரக் கூட்டுறவோ தொழில் நுணுக்க உதவியோ எதுவுமே இல்லாமல் முழுக்க முழுக்கச் சுதேசியாக விளங்கிய கோத்ரெஜ் ஸ்தாபனம், அடைந்துள்ள முன்னேற்றத்தைக் கண்டு நேருஜி வியந்து போற்றினார்.

கோத்ரெஜுக்கும் மகாத்மா காந்திக்கும் நெருங்கிய நட்டுறவு இருந்து வந்தது. ஒரு சமயம் ஒரு தொழிலதிபர் தாமும் சோப்புத் தயாரிக்கப் போவதாகவும் அதற்கு மகாத்மாவின் ஆசி வேண்டும் என்றும் கேட்டார். அப்போது அண்ணல் அவர் கோத்ரெஜுக்குப் போட்டியாக ஒரு தொழிலகம் தொடங்கப் போவதை உணர்ந்து கொண்டார். “கோத்ரெஜ் எனது அந்தியந்த நண்பர். அவருக்கு உனது புது தொழிலகத்தால் ஏதேனும் இடையூறு ஏற்படக் கூடுமானால் நான் மனப்பூர்வமாக உனக்கு வாழ்த்து அளிப்பதற்கில்லை, வருந்துகிறேன்” என்று கூறி விட்டார் காந்திஜி!

இவ்வாறெல்லாம் தொழில்வளப் பெருக்கத்துக்கு முன்னோடியாக விளங்கிய கோத்ரெஜ் இந்தியா சுதந்திரம் பெறுவதைப் பாராமலே கண்களை மூடிவிட்டார். எனினும், அவரது பெயரைத் தாங்கி நிற்கும் கோத்ரெஜ் கம்பெனி அவரது நூறாவது பிறந்த தினத்தன்று ஆல்போல் தழைத்துப் பல துறைகளிலும் உற்பத்தியைப் பெருக்கி வருகிறது. கோத்ரெஜின் ஆன்மா சாந்தியடையும் வகையில் ஜனநாயகம் இந்த நாட்டில் தழைக்க ஒரு மகத்தான பணியாற்றியிருக்கிறது இந்த ஸ்தாபனம். அது தேர்தலுக்குத் தேவையான எண்ணற்ற வாக்குச் சீட்டுப் போடும் பெட்டிகளைத் தயாரித்து அளித்ததுதான்!

**சென்ற இதழ் தொடர்ச்சி**



# சங்கரம்
## 'பூரம்'

## 5

**க**ல்யாணியைக் குழந்தையாகத்தான் நான் இது நாள் வரை பார்த்தேன். அம்மாவைப் பிரிந்து அவள் கதறிய கதறல் நேற்றுப்போல் இருக்கிறது. குழந்தை மாதிரி அவள் தேம்பிய காட்சி இன்னும் மறக்க முடியவில்லை. வீணையைத் தொட்டவுடன் அவள் விம்மி அழுததும், மயங்கி விழுந்ததும், நினைவில் மாறவில்லை. நான் அவளைக் குழந்தையைத் தேற்றுவது போல் தேற்றியிருக்கிறேன். பிடிவாதம் பிடிக்கிற குழந்தையின் மனசை மாற்றுவது போலப் பேச்சை மாற்றியிருக்கிறேன்..... கல்யாணி வெகு விரைவில் துக்கத்தை மறந்து போய்விட்டாளே! என்னிடம் அவள் காட்டிய பரிவும் பாசமும் நாளுக்கு நாள் வளர்ந்துவிட்டனவே! நான் எதற்கெல்லாம் பயந்தேனோ, அதெல்லாம் நடந்து விட்டதே !

கல்யாணி என் நினைவாகவே இருந்தாள். என்னைக் காணாதபோது சோர்வடைந்தாள். கண்டவுடன் நெய்யிட்ட விளக்குப்போல் புன்னகை செய்தாள்.

நான் அவள் மகிழ்ச்சிக்குக் காரணமாக இருப்பதில் எனக்குச் சற்று ஆறுதலாகத்தான் இருந்தது. ஆனால் இன்னமும் நெஞ்சில் ஓர் இடறல் என்னைத் துன்புறுத்திற்று.

மாமியின் விருப்பத்துக்கு விரோதமாக நான் ஆகிக் கொண்டிருக்கிறேனோ?

நான் குற்றவாளி இல்லை. கல்யாணி சின்னக் குழந்தை இல்லை. அவள் வளர்ந்த பெண்தான். நான் அவளை ஏமாற்றி அவள் நெஞ்சைக் கவரவில்லை. அவள்தான் என்னை வலுவில் வந்து நாடுகிறாள். என்னைப் பற்றி அவளுக்கு நன்றாகத் தெரியும். அதெல்லாம் புரிந்து கொள்ளாத சிறுமி இல்லை அவள்.

என் தாழ்வு நிலையை நான் நினைவுபடுத்தும்போதெல்லாம் அவள் முகம் கனிப்பதைக் காண முடிகிறது. நான் கலங்குவதை அவள் விரும்பவே இல்லை. என் மகிழ்ச்சி அவள் மகிழ்ச்சியாக இருக்கிறது.

அப்புறம் அவளைப் பார்க்கும் போதெல்லாம் அவள் பொன் முகத்தில் அலைமோதும் காதலை நான் ரஸித்தேன். அவள் வண்டு விழிகளில் துள்ளும் சுறுசுறுப்பையும், மின்னும் புன்னகையில் மிளிரும் வசீகரத்தையும் நான் ரஸித்தேன்.

''கல்யாணி...! நீ அம்மாவைப் போலவே அழகாயிருக்கிறாய். உன்னைப் பார்த்துக் கொண்டே இருந்தால் இனந் தெரியாத நிம்மதி எனக்கு வந்துவிடுகிறது. நீ வீணையைக் கையில் ஏந்துகிறபோது கலைமகளாய்த் தோன்றுகிறாய்! உன் கானம் தேவகானமாய் என்னைப் பரவசப்படுத்துகிறது......''

நான் திடீரென்று அவளிடம் அப்படிச் சொன்னபோது அவள் ஆச்சரியத்தோடு இமைகளைப் படபடவென்று கொட்டினாள். அந்த விழிச் சுடர்கள் என்னைக் கொஞ்சம் கொஞ்சமாய் மயக்கத்தில் ஆழ்த்தின. மென்மையும் மணமும் அழகும் செல்வமும் ஒருங்கே வந்து, சேர்ந்து வந்து, என்னருகே வந்து என் காலடியில் கெஞ்சிற்று.

அவள் குனிந்த தலை நிமிரவே இல்லை.

''இப்பொழுதுதான் நிம்மதியாக இருக்கிறது......!''

கல்யாணியின் குரலில் அந்த வார்த்தைகளைக் கேட்டபோது என் உள்ளம் சிலிர்த்தது. இது கனவு இல்லை. நனவுதான்.

மாமா எதையும் கவனிக்காமல் இருப்பது தான் எனக்கு ஆச்சரியமாக இருக்கும். இப்படிக்கூடப் பெற்றவர்கள் இருப்பது உண்டா என்று நான் திகைப்பது உண்டு. அவர் என்னைப் பற்றி என்ன நினைக்கிறார் என்பதையும், நான் கல்யாணியைக் கல்யாணம் செய்துகொள்ள நினைப்பதை அறிந்து அவர் என்ன சொல்வார் என்பதையும் நான் தெரிந்து கொள்ள விரும்பினேன். கல்யாணி என்னைத்தான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாள். நானும் அவளும் பிரிக்க முடியாதவர்கள். நான் பரம ஏழையாக இருக்கலாம். ஆனால் நானும் அவளும் கல்யாணம் செய்து கொண்டு வாழப் போவது என்னவோ மாற்ற முடியாத நிர்மாணம்.

அவர் என்னை விசாரிப்பதே இல்லை. என்னைப் பற்றி நினைப்பதே இல்லை. ஒரு நாள் அவரிடம் நான் கல்யாணியைப் பற்றிப் பேச வேண்டும். பிறகு நானும் அவளும் கல்யாணம் செய்து கொண்டு வேறு எங்காவது சென்று வாழ வேண்டும். அதற்கு அவர் அநுமதி தரவேண்டும். அதற்கு ஒரு சரியான சந்தர்ப்பத்தை நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

ஒரு நாள் காலையில் கல்யாணிக்குத் திடீரென்று ஜுரம் வந்துவிட்டது. படுக்கையை

விட்டு எழுந்திருக்காமல் அவள் வேதனையில் தவித்தாள். அந்த வேதனையைக் காணவே என் நெஞ்சு பதறிற்று.

''டாக்டருக்கு போன் பண்ணியிருக்கிறேன்.... இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்துவிடுவார்.....'' என்று அவளைத் தேற்றி விட்டு மாமாவிடம் வந்து சொன்னேன்.

''அடேடே.... டாக்டருக்குப் போன் பண்ணினாயோ?.... சரி, நான் சொல்கிறேன்.....'' என்று அவரும் போனில் டாக்டரை அழைத்து விட்டுக் கல்யாணியை வந்து பார்த்தார்.

''என்னம்மா, கல்யாணி! என்ன பண்ணுகிறது, அம்மா?.....''

''எனக்கு ஒன்றுமில்லையப்பா, நாளைக்கு ஜுரம் சரியாகிவிடும்.''

''டாக்டர் வருவார். 'ரெஸ்ட்' எடுத்துக் கொள். என்ன? நர்ஸ் ஒருத்தியை வரச் சொல்கிறேனே......!''

''வேண்டாமே, அப்பா.....!''

''இல்லை. நீ பேசாமல் தூங்கு......'' என்று நாலு நிமிஷ நேரம் பேசிவிட்டுப் போய் விட்டார். ஏதோ நாடகம் பார்க்கிற மாதிரி இருந்தது எனக்கு. கண்ணுக்குக் கண்ணாய் மாமி வளர்த்த குழந்தையைக் கவனிக்கிற அழகா இது? அவனுக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது.

''கல்யாணி! நான் உன் அருகிலேயே தான் இருக்கிறேன். நீ ஏன் கவலைப்பட வேண்டும்? சாதாரண ஜுரத்துக்கு நர்ஸ் எதற்கு, டாக்டர் எதற்கு? அப்பாவிடம் சொல்லிவிடு......!''

''அப்பாவிடம் சொல்லி விட்டேன். அவர் கேட்க மாட்டார்......!''

''நான் இன்று அப்பாவிடம் எல்லாவற்றையும் கேட்கலாம் என்றிருந்தேன். உனக்கு உடம்புக்கு வந்து விட்டது.;.....!''

''எனக்கு நாளையே சரியாகிவிடும்.''

மூன்று நாட்கள் கல்யாணிக்கு ஜுரம் விடவே இல்லை. அந்த மூன்று நாட்களும், நர்ஸ் ஒருத்தி இயந்திரம் மாதிரி கேள்விகள் கேட்டாள். மருந்து கொடுத்தாள். பொம்மை மாதிரி சற்று நேரம் உட்கார்ந்திருந்தாள்.

நான் கல்யாணியின் அருகிலேயே உட்கார்ந்து அவளைக் கவனித்தேன். ஏதாவது புதிய விஷயங்களைச் சொல்லிச் சற்று நேரம் அவள் வேதனையை மறக்கச் செய்தேன். மூன்று நாட்களும் நான் தூங்கவே இல்லை. நர்ஸ் அயர்ந்தபோது வேளை தவறாமல் மருந்து கொடுப்பதற்கு நினைவுபடுத்தினேன்.

நான்காம் நாள் காலையில் கல்யாணிக்கு உடம்பு சரியாகி விட்டது. டாக்டர் வந்து பார்த்துவிட்டு இனிமேல் மருந்து தேவையில்லை என்று சொல்லிப் போய் விட்டார். எனக்கு மிகவும் நிம்மதியாக இருந்தது. தேவி புவனேசுவரியின் முன்னிலையில் நான் மனமுருகி நின்றேன். என் அருமைக் கல்யாணியைக் காப்பாற்றிக் கொடுத்த அந்தத் திருவருளுக்குத் தலை வணங்கினேன்.

அன்று மாலை வழக்கத்துக்கு விரோதமாக மாமா சீக்கிரம் வீட்டுக்கு வந்துவிட்டார். வந்ததும் வராததுமாய் என்னை அழைத்தார். வேலைக்காரன் வந்து என்னைக் கூப்பிட்டதாகச் சொன்னதும் எனக்கு மிகவும் அதிர்ச்சியாக இருந்தது. என்னைத் திடீரென்று எதற்காக அழைக்க வேண்டும்?.... இத்தனை நாட்களில் என்னை இப்படி அழைத்துப் பேசியதே இல்லையே.....! மாமியின் மறைவுக்குப் பிறகுகூட இத்தனை மாதங்களில் என்னை அழைத்துப் பேசவில்லை. காரணம் தெரியாத கலவரத்தோடு நான் அவர் அறைக்குள் சென்றேன். இனம் புரியாத வேதனையும் கவலையும், என் சங்கோசமும் என்னை வாட்டி வதைத்தன. 'தாயே! நீயே கதி!' என்று உள்ளம் அலறிற்று.

''சங்கர்..... இப்படி உட்கார்......''

அவர் முன்னால் உட்காரவே எனக்குச் சங்கடமாக இருந்தது.

''உன்னிடம் இப்பொழுது ஒரு கேள்வி கேட்க வேண்டும், சங்கர்! வெகு நாட்களாக நான் கேட்காமல் இருந்து விட்டேன்.'' அவர் முகத்தில் எந்தவித உணர்ச்சியும் இல்லை. அவர் என்ன நினைத்திருக்கிறார், என்ன கேட்கப் போகிறார் என்று என்னால் ஊகிக்க முடியவில்லை.

''கேளுங்கள், மாமா.....!''

''கல்யாணிக்குக் கூடிய சீக்கிரம் கல்யாணம் செய்து விடலாம் என்று உத்தேசம். என் நண்பர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள். எல்லாரும் நல்ல வசதி உள்ளவர்கள்.... நல்ல வரனைப் பார்த்து இரண்டு மூன்று மாதங்களில் முடித்து விட்டால் அப்புறம் என்பாடு நிம்மதியாகி விடும்..... அப்புறம் உன் வாழ்க்கையைப் பற்றி நீ உடனே தீர்மானிக்க வேண்டும். உனக்கு - மாமி தாயாக இருந்து வளர்த்தாள். நீயும் படித்து ஆளாகி விட்டாய். இனிமேல் கவலை இல்லை. நீ சுயமாகச் சம்பாதித்துக் கொள்ள முடியும். இல்லையா?''

அவர் நிறுத்தி வெகு நிதானமாகப் பேசினார்.

அந்தச் செய்தியில் தொடர்பு எதுவும் இல்லாமல் மூடி மறைத்து எதையோ சொல்ல விரும்புவது போலத் தோன்றிற்று. அவர் கடைசியாகக் கேட்டது மட்டும் என்னை நிதானத்துக்குக் கொண்டு வந்தது.

நான் தலை நிமிர்ந்தேன்.

அவர் என்னை நேருக்கு நேர் பார்க்காமல் எதிர்காலத்தையே கனவு காண்பதுபோல் எங்கோ பார்த்துக் கொண்டிருந்தார்.

''என்ன சங்கர், நீயும் படித்து முடித்தாகி விட்டது. மாமியின் பிள்ளையாக நீ இருந்து அவள் குறையை நீ தீர்த்தாய். அதில் அவளுக்குப் பரம திருப்தி வந்து விட்டது. உனக்கு நான் அதனால்தான் இவ்வளவு செய்தேன்..... உன்னால் தனியாகச் சென்று சம்பாதிக்கும் அளவுக்குத் தைரியம் இருக்கிறது இல்லையா?''

''தாராளமாய், மாமா...நானே இத்தனை நாட்கள் கேட்க வேண்டும் என்றுதான் இருந்தேன். இனிமேல் நான் வேலை தேடிச் சென்று பிழைத்துக் கொள்வேன். தந்தை

கோடுபோட்ட மற்றும் கட்டம் போட்ட பாப்ளின் சூட்டிங்,
வெண்ணிற மற்றும் சாயம் தோய்த்த பாப்லின்களும்,
டாப்பி பாப்லின்களும்.
வெண்ணிற மற்றும் சாயம் தோய்த்த
பிரிண்டெட் லான்கள், பிரிண்டெட்
வாயில்கள்.
கண்கவர் விசேஷங்களில் 2x2
ஃபுல் வாயில்கள்.
புட்டாக்கள் மற்றும் புடவைகள்
ஸுபர்ஃபைன் வேஷ்டிகள்
காபர்டின் கோட்டிங்.

அழகுத் தேவதையோ
எனவியக்கத்தக்க

இந்த ஆரணங்கு அணிந்திருப்பது

# ராய்ப்பூர்

தரத்தில் சிறந்த துணிவகைகள்

**ராய்ப்பூர் மில்ஸ், அகமதாபாத்**




SANFORIZED

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்:

**மெஸர்ஸ் அஜித்பாய் ஜயந்திலால் சோமாபாய் பட்டேல் & கோ**
5, கிடங்குத் தெரு, மதராஸ்.

ஏகபோக ஏற்றுமதி ஏஜெண்டுகள் :

**திரு. லால்பாய் எக்ஸ்போர்ட்ஸ் லிமிடெட்**
**கண்ட்ரக்டர் பில்டிங், நிக்கோல் ரோடு, பல்லார்ட் எஸ்டேட், பம்பாய்-1**

யாக நீங்களும், தாயாக மாமியும் இருந்து என்னை வளர்த்ததற்கு நான் என்ன பிரதி செய்ய முடியும் என்றுதான் புரியவில்லை. உங்கள் வீட்டில் நான் பரம்பரை பரம் பரையாகத் தொண்டு புரிய வேண்டும்.''

''அதெல்லாம் வேண்டியதில்லை, சங்கர். நீ சுகமாய் இருக்க வேண்டும். அவ்வளவு தான். உனக்கு ஒரு வேலையும் நான் செய்து வைக்கிறேன். நீ நன்ருக முன்னுக்கு வர லாம்......!''

''நீங்களும் மாமியும்தான் என் தெய்வம்'' என்று அவர் காலடிகளில் நான் விழுந்து வணங்கிய போது என் கண்களில் கண்ணீர் அருவியாய்ப் பெருகிற்று.

''ஏன் அழுகிருய் சங்கர் ?''

''மாமியை நினைத்துக் கொண்டேன்'' என்றேன் நான்.

## 6

நான் கல்யாணியிடம் இதைப் பற்றிச் சொல்லவேயில்லை. அவள் உடல் நிலை தேறிப் பழைய பொலிவைப் பெற்ருள். உல்லாச மாய் உலாவினுள். நான் மட்டும் மனத்துக் குள் எனது தீர்மானங்களை மாற்றிக் கொண் டேன். நானும் அவளும் கல்யாணம் செய்து கொண்டு வாழ்வது என்பது வீண் பகற் கனவு என்று முடிவாகி விட்டது. முன்பு நினைத்தபடி அவள் என் எஜமானிதான்! நான் அவள் வேலைக்காரன்தான்! நான் அடிமைதான்! என் புத்தி நடுவில் எப்படி யெல்லாம் பேதலித்துப் போய்விட்டது என்று தோன்றிற்று..... இவர்கள் வீட்டில் இத்தனை நாட்கள் வளர்ந்து விட்டுக் கொஞ்ச மும் நன்றியில்லாமல் துரோகம் செய்ய அல்லவா நினைத்தேன். தெய்வமே! எனக்கு என்ன தண்டனை வேண்டுமானுலும் கொடு! கல்யாணியைக் கல்யாணம் செய்து கொள்ள ஆயிரமாயிரம் பேர் பொன்னும் மணியும் கொண்டு வந்து காத்திருக்கிருர்கள். ஆகா, என்னுடைய நீசத்தனமான ஆசையை என்னவென்று சொல்வது? எப்படிப்பட்ட அசட்டுக் கனவைக் கண்டு ஆகாயக் கோட்டைகள் கட்டியிருக்கிறேன். இந்தத் தவற்றுக்கு எங்கே போய் நான் மன்னிப்புக் கேட்பேன்? எங்கே சென்று என் பாவச் சுமைகளை இறக்கி வைப்பேன்? இந்த நெஞ்சில் குத்திக் கொண்டு உயிர் துறந்தால் என்ன? மண்டையை மோதிக் கொண்டால் என்ன? நாக்கைப் பிடுங்கிக் கொண்டால் என்ன? தாயே! நான் தண்டனை அனுபவித்தாக வேண்டும். நான் நன்றி கெட்டவன்.

நான் இங்கிருந்து உடனே போய்விட வேண்டும். உண்ட வீட்டுக்கு உபகாரம் செய்யாவிட்டாலும் அபகாரம் செய்யாமல் விலகிக் கொள்வது நல்லது.

கல்யாணியிடம் என் எண்ணங்களை வெளி யிடவே இல்லை. மாமா என்னைக் கூப்பிட்டுப் பேசியதையும், நான் மனம் தெளிந்ததை யும் சொல்லிக் கொள்ளவில்லை. கல்யாணி குழந்தைதான்! அவளுக்கு என்ன தெரிந்து விட்டது! களங்கமில்லாத மனதினுல், அசட் டுத்தனமாக என்னைக் காதலித்தால், நானல் லவா அவளுக்குப் புத்தி சொல்ல வேண்டும்?

வாழ்க்கைச் சித்திரம் - 5

# இரவல்

தமிழழகன்

மலரே, மணம் நீ எங்கு பெற்ருய்? - அதை
 மண்ணில் இருந்தே இங்கு பெற்றேன்!
மலரே, மது நீ எங்கு பெற்ருய்? - அதை
 மழை நீர் சொரிந்தே பங்கு பெற்றேன்!

மலரே, இதழ் நீ எங்கு பெற்ருய்? - அதை
 மங்கை சுவைத்தே நன்கு பெற்றேன்!
மலரே, எழில்நீ எங்கு பெற்ருய்? - அதை
 மாய வசந்தம் தந்து பெற்றேன்!




"மூன்று வருஷத்திற்கு உனக்குக் கல்யாணமே வேண்டாம் என்கிறாயே, ஏனப்பா?"

"எங்கள் கம்பெனியில் இன்னும் மூன்று வருஷங்களில் பத்து லேடி டைப்பிஸ்ட்களைச் சேர்ப்பதாக ஒரு திட்டம் இருக்கிறது. அது முடியட்டுமே என்றுதான் பார்க்கிறேன்!"

◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊

அவள் அறியாமல் ஒரு நாள் இரவில் இங்கிருந்து கிளம்பிச் செல்வது என்று தீர்மானம் செய்தேன்.....

"நீங்கள் முன்னைப் போல் இல்லை. ஏதோ எனக்குப் பயமாக இருக்கிறது.....!" என்றாள் கல்யாணி.

"நான் எப்பொழுதும் போலத்தான் இருக்கிறேன். நடு நடுவில் ஏதாவது எனக்குக் கவலைதான் வந்துவிடும்......!"

"என் முகத்தைப் பார்த்து நீங்கள் பேசுவதில்லை இப்பொழுதெல்லாம்....."

"ஏன், நான் அப்படியெல்லாம் இல்லவே இல்லையே.....!"

"அப்பா ஏதாவது கேட்டாரா, நீங்கள் அவரோடு பேசினீர்களா?"

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. நீ அதெல்லாம் கவலைப்படாதே! நான் எப்பொழுதும் போலத்தான் இருக்கிறேன்......!"

இப்படி நான் பல தடவைகள் அவள் கேள்விகளுக்கு நழுவினேன். அவள் பார்வையில் நான் கூனிக் குறுகி மனத்துக்குள்ளே கதறி அழுதேன். அவளை நாம் ஏமாற்றி விட்டுப் போகப் போவதை நினைத்தால் என் நெஞ்சு பதறிற்று. அதற்காக நான் கவலைப்படப் போவதில்லை. கல்யாணி என்னைப் பிரிந்து கொஞ்ச நாட்கள் வேதனைப்படுவாள். அப்புறம் கல்யாணமாகி, நாட்கள் நகர்ந்தால் எல்லாம் சரியாகப் போய்விடும். மனம் சமாதானமாகிவிடும்.

நான் கிளம்புகிற நாள் வந்தது. கல்யாணிக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதினேன். மாமா என்னை அழைத்துப் பேசியதையும், என்னைப் பெருந்தன்மையோடு அவர் மன்னித்ததையும் விவரமாகக் குறிப்பிட்டேன். அவளை எப்படி எப்படியெல்லாம் தேற்ற வேண்டுமோ அப்படியெல்லாம் தேற்றினேன். என் நிலைமையைத் தெளிவாக விளக்கி அவள் எனக்காகவே மனத்தைத் தேற்றிக் கொண்டு, என்னைச் சகோதரனாக ஏற்க வேண்டுமென்று கெஞ்சினேன்.

கடிதத்தைப் படித்துக் கல்யாணி சமாதானமடைவாளோ மாட்டாளோ, அதைப் பற்றி நான் அதிகமாகக் கவலைப்படக் கூடாது.

நடு இரவில் ஏற்கனவே சேகரித்த என் உடைமைகளை மட்டும் எடுத்து ஒரு பெரிய பெட்டியில் வைத்துக் கொண்டு கிளம்பினேன். கொஞ்சம் கூடச் சத்தம் செய்யாமல் மாடிப் படிகளில் இறங்கி முன் ஹாலுக்கு வந்தபோது இருள் படர்ந்து கிடந்தது. இடது பக்கம் பூஜையறையில் வழக்கம் போல் தூண்டாமணி விளக்கு வெளிச்சத்தை இலேசாகத் தூவிக் கொண்டிருந்தது. பூஜை அறைக்குப் பக்கத்து அறையில் கல்யாணி தூங்கிக் கொண்டிருப்பாள். குழந்தை போலக் கண் வளரும் கல்யாணி ஏமாந்து போவாள்.... இதில் நான் என்ன தவறு செய்கிறேன்? நல்லதற்காக ஏமாற்றுவதில் என்ன குற்றம் வந்து விடும்?

பூஜை அறைக் கதவை இலேசாகத் திறந்தேன். மேடையில் வீணை இன்று எனக்காகவோ என்னவோ உறையில்லாமல் வீற்றிருக்கிறது. பளபளவென்ற அந்த வீணையின் தெய்விக அழகு என் மாமியின் உயிர்... மாமியையே அதில் நான் காண்கிறேன்.

நான் தலையோடு கால் தரையில் பட விழுந்து வணங்குகிறேன். குமுறிக் குமுறித் துக்கம் பாய்ந்து வருகிறது.

சத்தமே செய்யவில்லை. நிலைப்படியைத் தாண்டும்போது குழல் மணிகள் என் தலையைத் தொடுகின்றன. என்னுடைய மெய் சிலிர்க்கிறது.

கல்யாணிக்கு எழுதிய கடிதத்தை அவள் அறைக் கதவினுள் மெதுவாகத் தள்ளினேன்.

'கண்ணே கல்யாணி! என்னைக் கோபித்துக் கொள்ளாதே!...'

ஹாலைக் கடந்து வந்தபோது 'போர்டிகோ'வில் இருள் சூழ்ந்து கிடந்தது. வெளியே காற்றே இல்லை. ஒரே புழுக்கமாக இருந்தது. நான் எங்கே போவதென்று இன்னும் தீர்மானம் செய்யவில்லை. பங்களா கேட்டைத் தாண்டினால் எங்கேவேண்டுமானாலும் போய்க் கொள்ளலாம்.

பதினைந்து வருடங்கள் வளர்ந்த இந்த இடத்தை விட்டுத் திருடன்போல் நான் நழுவி ஓடுகிறேன்!

ஆகாயத்தைப் பார்த்தேன். நட்சத்திரங்களே இல்லை. மேகங்கள் திரண்டு கொண்டிருந்தன. மழை வரும்போலத் தோன்றிற்று. நல்லதுதான். என் பாபத்தைக் கொட்டும் மழையில் நனைந்து போக்கிக் கொள்வேன்.

பளீரென்று ஹாலில் விளக்கு எரிந்தது. நான் வெளிச்சத்தில் அதிர்ந்து நின்றேன். கல்யாணி வீணையும் கையுமாய் வந்து கொண்டிருந்தாள்.

VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEEN

Veena • எம்ப்ராய்டரீஸ்

நவீன டிசைன்கள், கண் நிறைந்த வண்ணங்கள்,
மனதைக் கவரும் சித்திர தையல்
வேலைப்பாடுகள் அமைந்தது.
மற்ற எல்லா
சித்திர தையல் துணிகளுக்கும்,
லேஸ்களுக்கும்
மிகச் சிறந்தவை.



தயாரிப்பாளர்கள்;
**S.S.M. பிரதர்ஸ் (பி) லிட்.,**
த.பெ.எண்-8,
குமாரபாளையம் பேட்டை,
(ஈரோடு வழி)

எங்கள் இதர உற்பத்திகள்;
யாழ் (வீணா) மார்க் பருத்தி &
ரயான் வேஷ்டிகள்,
சர்ட்டிங்ஸ், பட்டுத்துணிகள்,
விசேஷ ரக
பவானி பட்டு சிப்பன்கள்.

சென்னை ஏக
ஸ்டாக்கிஸ்ட் & ஏஜண்ட்:
அமர்ஜோதி டிரேடர்ஸ்
99, கிடங்கு தெரு, சென்னை-1

---

# ரணசிகிச்சையின்றிப் புது முறையில் வலிமயமான மூலத்தைச் சுருக்கிக் குணமளிக்கிறது, நமைச்சலை நிறுத்துகிறது வலி தணிக்கிறது.

**நியூயார்க்–தீவிரப் பிணிகளில் தவிர மற்றபடி ரண சிகிச்சையின்றியே மூலத்தைச் சுருக்கி, நமைச்சலை நிறுத்தி, வலி தணிக்கும் அற்புத வல்லமையுள்ள புதிய மருந்துப் பொருளை முதன் முறையாகக் கண்டுபிடித்துள்ளது விஞ்ஞானம்.**

டாக்டரின் கண்காணிப்பில் நிகழ்த்தப் பட்ட பரிசோதனைகளே இதற்கு அத்தாட்சி-வலியும் நமைச்சலும் உடனடியாகத் தணிக்கப் பட்டன. இதனுடன் மெல்ல வலியாற்றிய அதே சமயம், உள்ளபடி சுருக்கமும் குணமும் ஏற்பட்டது.

அனைத்திலும் அதிசயம் என்னவெனில், பத்து, இருபது ஆண்டுகள் நீடித்திருந்த பிணிகளிலும் இந்த அபிவிருத்தி நிலைபெற்றதுதான்.

உலகப் புகழ்பெற்ற ஆராய்ச்சிக் கழகம் ஒன்றின் கண்டுபிடிப்பாகிய பயோடைன் * என்ற புதிய மருந்துப் பொருளே இதன் இரகசியம்; இப்புதிய மருந்துப் பொருள் தற்போது ப்ரிப்பரேஷன் ஹெச் என்ற பெயருடன், களிம்பு வடிவிலே அளிக்கப் படுகிறது. மூலத்தைச் சுருக்குவதோடு, மலப்பாதைக்கு மழமழப்பூட்டி, மலப்போக்கினை வலி அற்றதாக்குகிறது. ரணமும் நமைச்சலும் மேலும்பரவுவதைத் தடுக்கிறது. ப்ரிப்பரேஷன் ஹெச், 30 கி. மற்றும் 50 கி. ட்யூபுகளாக இடுகுழாயுடன், எல்லா உயர்தர மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

மூல நோய்பற்றி விளக்கும் சிறுநூலை இலவசமாகப்பெற இன்றே எழுதுக: டிபார்ட்மெண்ட் 38. ஜெப்ரி மானெர்ஸ் & கோ. லிட்; தபால் பை: 1033, பம்பாய்-1 பி.ஆர்

*டிரேட் மார்க்

JJ-PH TM

''இதோ கிளம்பி விட்டேன்'' என்றாள் கல்யாணி. என் திட்டங்கள் பொடியாகி விட்டதைக் கண்டு நான் தலை குனிந்தேன்.

''உங்கள் கடிதத்தை நான் படிக்க வேண்டிய அவசியமே இல்லை. நீங்கள் என்ன செய்வீர்கள் என்று எனக்குத் தெரியும்!''

நான் பேசவேயில்லை. என் நெஞ்சைத் துக்கம் அடைத்து விட்டது. அசையாமல் நான் இன்னமும் நிற்கிறேனே!...

''ஏன், கிளம்பலாம், வாருங்கள்... இந்த வீணையை நான் எடுத்துக் கொண்டு வரலாமல்லவா?'' என்று என் அருகில், மிக அருகில் வந்து மெதுவாகச் சொன்னாள்.

என் நெற்றி வியர்த்துக் கொட்டியது. கண்களில் கண்ணீர் நிறைந்து மயக்கமே வரும்போல் இருந்தது. 'தேவி! என் உயிரை எடுத்துக்கொள்! இப்படியே என் உயிரை எடுத்துக் கொண்டுவிடு!'

''யாரோ நல்ல தூக்கத்தில் வந்து என்னை எழுப்பிய மாதிரி இருந்தது. நீங்கள் அப்போது மாடிப்படியில் இறங்கிக் கொண்டிருந்தீர்கள். பூஜை அறையில் போனபோது நான் பார்த்தேன். இதோ அதற்குள் நானும் கிளம்பி விட்டேன். வாருங்கள் போகலாம். ம்... சீக்கிரம். அப்பா விழித்துக் கொண்டு விடுவார்...''

நான் கற்சிலையாய் நிற்கிறேன்.

''ஏன், அப்பாவிடம் சொல்லிக்கொண்டே போய்விடலாம். கண்ணா! வாருங்கள் ..''

அவள் என்னை உள்ளே இழுத்துக்கொண்டு வந்தாள். பூஜை அறைக்கு வந்து வீணையை மெதுவாக வைத்தாள்.

''இந்த ஸந்நிதியை விட்டுப் போகத்தான் எனக்கு மனசு வரவில்லை. ஆனால் நீங்கள் கிளம்பினால் நான் வந்துதான் ஆகவேண்டும். எங்கேயாவது சென்று நாம் நிம்மதியாக இருக்கலாம்...''

கல்யாணி இவ்வளவு தீர்மானமாய், இட்ட வட்டமாய்ப் பேசி நான் பார்த்ததே இல்லை. குழந்தையாய்க் கொஞ்சியவளா இவள்?... பெண்களே இப்படித்தானோ?

''கல்யாணி, நான் அனாதை. உற்றார் உறவினர் யாரும் இல்லாத ஏழை. நான் அநாதை!''

''ஆமாம், நானும் அநாதைதான்.... அநாதையாவதற்கு ஒரே ஒருவர் உயிர் விட்டால் போதும். அம்மா மயங்கி விழுந்த அந்த நிமிஷத்திலிருந்தே நானும் அநாதை தான். என்னைக் காப்பாற்றுங்கள். என்னை விட்டு விட்டுப் போகாதீர்கள்... போகாதீர்கள்!...'' — கல்யாணி விம்மி விம்மி அப்படியே வீணை மேல் சாய்ந்தாள்.

பதறிப்போய் அவள் முகத்தைத் தாங்கிப் பிடித்தேன்.

''என்னை விட்டு விட்டுப் போக வேண்டாம். ஆணை, தேவியின் மேல் ஆணை...'' என்று அவள் இதழ்கள் முணுமுணுத்துக் கொண்டே யிருந்தன.

தேவி புவனேசுவரி படத்தினடியில் இது வரை நான் கவனிக்காமலே இருந்து வந்த எழுத்துக்கள் மாமியின் குரலில் காதில் வந்து இனிமையாய் விழுந்தன.

''தன்னையும் தனதையும் அன்னைக்கே அர்ப்பணித்துவிடு!''

என்னைப் பெற்ற அன்னையும், வளர்த்த அன்னையும் அகில புவனங்களுக்கும் அன்னையாய் விளங்குகிற தேவியின் படத்தில் வந்து கலந்து நின்ற காட்சி என் கண் முன்னால் வந்தது.

பளீரென்று மின்னல் ஒன்று மின்னியது. படீரென்று இடி இடித்து மின்னலைத் துரத்திற்று!

மழை 'சோ' வென்று கொட்டிக் கொண்டிருந்தது.

---

## கனவு காணவும் உரிமை இல்லையா ?






## 1

சென்னை, டாம்டும் கம்பெனியின் முதலாளிக்கு, சென்னை குடும்பக் கட்டுப்பாடு அதிகாரி எழுதிக்கொள்வது:

ஐயா,

தங்கள் நிறுவனத்தில் உள்ள எல்லாத் தொழிலாளர்களும் குடும்பக் கட்டுப்பாடு சிகிச்சை எடுத்துக் கொள்ள வேண்டியதன் அவசியத்தைப் பற்றிப் பல தடவைகள் நான் நேரிலும் கடிதம் மூலமும் தெரிவித்துள்ளேன். ஆனால் குடும்பக் கட்டுப்பாட்டினால் ஏற்படக் கூடிய நன்மைகளைத் தங்கள் தொழிலாளர்கள் தெரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. ஆகவே குடும்பக் கட்டுப்பாடு சிகிச்சை செய்து கொள்ளும் ஒவ்வொருவருக்கும் நாங்கள் ரூபாய் முப்பது நன்கொடையாகக் கொடுக்கத் தயாராக இருக்கிறோம் என்பதை அவர்களுக்குத் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

தங்கள்
குடும்பக்கட்டுப்பாட்டு அதிகாரி

## 2

சென்னை குடும்பக் கட்டுப்பாட்டு அதிகாரிக்கு, டாம் டூம் கம்பெனியின் முதலாளி எழுதிக் கொள்வது:

ஐயா,

குடும்பக் கட்டுப்பாட்டுச் சிகிச்சை செய்து கொண்டால், தாங்கள் தலைக்கு முப்பது ரூபாய் கொடுக்கத் தயாராக இருப்பதாக எல்லாத் தொழிலாளர்களிடமும் தெரிவித்தேன்...அதைக் கேட்டு அவர்கள் சிரிக்கிறார்கள். ஏன் சிரிக்கிறார்கள் என்பதுதான் தெரியவில்லை.

தங்கள்
டாம் டூம் கம்பெனியின் முதலாளி

## 3

சென்னை டாம் டூம் கம்பெனியின் முதலாளிக்கு, சென்னை குடும்பக் கட்டுப்பாட்டு அதிகாரி எழுதிக் கொள்வது:

ஐயா,

தங்கள் தொழிலாளர்கள் சிரிக்கிறார்கள் என்றால் ரூ. 30 போதாது என்று நினைக்கிறார்கள் என்றுதான் அர்த்தம். ஆகவே அவர்கள் என்னதான் கேட்கிறார்கள் என்று கேட்டுச் சொல்லவும்.

தங்கள்
குடும்பக் கட்டுப்பாட்டு அதிகாரி

## 4

சென்னை குடும்பக் கட்டுப்பாட்டு அதிகாரிக்குச்



சென்னை டாம் டூம் கம்பெனியின் முதலாளி எழுதிக் கொள்வது:

ஐயா,

தாங்கள் சொன்னபிறகுதான் என் தொழிலாளர்கள் ஏன் சிரித்தார்கள் என்பதை நானும் தெரிந்து கொண்டேன். விசாரித்ததில், தாங்கள் கொடுக்கும் பணம் போதாது என்று சிரித்ததாகத்தான் அவர்கள் சொன்னார்கள். ஆனால் என்னதான் வேண்டும் என்று கேட்டதற்கு இன்னும் அதிகமாகச் சிரிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

தங்கள்
டாம் டூம் கம்பெனியின் முதலாளி

## 5

டாம்டூம் கம்பெனி முதலாளிக்கு,

அவர்கள் என்னதான் கேட்கிறார்கள் என்று தயவுசெய்து தெரிந்து சொல்லவும்: குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தைத் தீவிரமாக்க வேண்டும் என்று டில்லி அதிகாரிகளிடமிருந்து உத்தரவு வந்திருக்கிறது. ஆகவே அவர்கள் சற்று அதிகமாகக் கேட்டாலும் கொடுக்கத் தயாராக இருக்கிறோம்.

தங்கள்
குடும்பக் கட்டுப்பாட்டு அதிகாரி

## 6

சென்னைக் குடும்பக் கட்டுப்பாட்டு அதிகாரிக்கு,

ஐயா,

தாங்கள் சொன்ன விஷயத்தை என் தொழிலாளர்களிடம் சொன்னேன். தாங்கள்




''என்ன பால்காரரே! உங்க பசு மாடுகளுக்கு ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பெயர் வைத்திருப்பதாகச் சொன்னீர்களே, என்ன என்ன பெயர் வைச்சிருக்கீங்க...?''

''காவேரி, கங்கை, கிருஷ்ணா, கோதாவரி......!''

---

கேட்கும் பணத்தைக் குடும்பக் கட்டுப்பாட்டு அதிகாரியால் கொடுக்க முடியாதென்று அவர்கள் சொல்கிறார்கள். என்னதான் வேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டேன். ஒவ்வொருவரும் ஆளுக்கு ரூ. 15,000 வேண்டும் என்று கேட்கிறார்கள்.

தங்கள்

டாம்டும் கம்பெனியின் முதலாளி

## 7

சென்னை டாம்டும் கம்பெனியின் முதலாளிக்கு, சென்னை குடும்பக் கட்டுப்பாட்டு அதிகாரி எழுதிக்கொள்வது:

ஐயா,

தங்கள் தொழிலாளர்கள் நான் குறிப்பிட்ட தொகையைக் கேட்டுச் சிரித்தார்கள் என்று கூறினீர்களே, இப்பொழுது அவர்கள் கேட்கும் தொகையைக் கேட்டு நான் சிரிக்க ஆரம்பித்து விட்டேன். எல்லாருக்கும் ரூ. 30 கொடுத்த இடத்தில் இவர்களுக்கு ரூ. 15000 கொடுக்க முடியுமா? எப்படி இப்பெருந் தொகையை இத்தனை தைரியமாகக் கேட்கிறார்கள் என்றுதான் புரியவில்லை.

தங்கள்

குடும்பக் கட்டுப்பாட்டு அதிகாரி

## 8

சென்னை குடும்பக் கட்டுப்பாட்டு அதிகாரிக்கு, சென்னை டாம்டும் கம்பெனியின் தொழிலாளர் தலைவர் எழுதிக் கொள்வது:

ஐயா,

தாங்கள் எங்கள் முதலாளிக்கு எழுதிய கடிதத்தை அவர் எங்களிடம் காண்பித்தார். நாங்கள் ஏன் ஆளுக்கு 15,000 ரூபாய் கேட்கிறோம் என்கிற விஷயம் தங்களுக்கு ஏன் புரியவில்லை என்கிற விஷயம்தான் எங்களுக்குப் புரியவில்லை. இதனால், தங்கள் இலாகா மந்திரி வெளியிடும் புள்ளி விவரங்களைத் தாங்களே படிப்பதில்லை யென்று தெரிகிறது. சமீபத்தில் தங்கள் இலாகா மந்திரியான ஸ்ரீ சத்தியநாராயண சின்ஹா அவர்கள் ஒரு பிறப்பைத் தடுப்பதால் அரசினருக்கு ரூ. 3000 லாபம் கிடைக்கிறது என்று கணக்குக் கூறியுள்ளார். நாங்கள் எல்லோரும் இளம் வயதினராகையால் எங்களுக்கு இன்னும் ஐந்து குழந்தைகள் குறைந்தபட்சம் பிறக்கும். ஆகவே இந்த ஐந்து குழந்தைகளால் அரசினருக்கு லாபமாகக் கூடிய ரூ. 15,000ஐ எங்களுக்குக் கொடுப்பதுதான் நியாயம்! ஆகவே தாங்கள் எங்களைப் பார்த்துச் சிரிக்க வேண்டாம். நாங்கள் உங்களைப் பார்த்துச் சிரிக்கிறோம்.

தங்கள்

தொழிலாளர் தலைவர்

## 9

கனம் மந்திரி சத்தியநாராயண சின்ஹா அவர்களுக்கு, சென்னை குடும்பக் கட்டுப்பாட்டு அதிகாரி எழுதிக் கொள்வது:

கனம் ஐயா அவர்களே,

தாங்கள் கொடுத்த புள்ளி விவரங்கள் நம் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தையே பாழாக்கி விடும்போல் தோன்றுகிறது. இங்கு ஒரு நிறுவனத்தின் தொழிலாளர்கள் குடும்பக் கட்டுப்பாட்டுச் சிகிச்சை செய்து கொள்வதற்கு ஆளுக்கு ரூ. 15,000 கேட்கிறார்கள். என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை; தவித்துக் கொண்டிருக்கிறேன்!

தங்கள்

சென்னை குடும்பக் கட்டுப்பாட்டு அதிகாரி



இரண்டு கண்களும் தெரியாத குருட்டுக் கழுதை ஒன்று ஒரு காட்டில் நுழைந்து விட்டது. சாலையில் நடந்து சென்று கொண்டிருந்தது போக, இப்படிப் புதர்கள் நிறைந்த காட்டில் வந்து சிக்கிக் கொண்டு விட்டோமே என்று அது வருந்திற்று. அப்போது மாலை மங்கும் நேரம். அவ்வழியே மரம் ஒன்றில் வீற்றிருந்த ஆந்தை ஒன்று இந்தக் கழுதையை மங்கிய ஒளியில் கவனித்தது. ஆமாம்; ஆந்தைக்கு இருட்டில்தானே நன்றாகக் கண் தெரியும்! மாலை மங்கும் நேரம் அதற்கும் மங்கல் வெளிச்சமாகத்தான் இருந்தது! நன்றாக இருட்டியபின் அந்தக் குருட்டுக் கழுதையின் முதுகில் போய் உட்கார்ந்து கொண்டு, ''கழுதை அன்பனே! நீ பயப்பட வேண்டாம். உனக்கு என்ன உதவி செய்ய வேண்டுமோ செய்கிறேன்!'' என்று கூறிற்று. இதைக் கேட்ட கழுதை மிகவும் ஆறுதலடைந்து, ''இப்படி யார் எனக்கு உதவி செய்ய முன்வருவார்கள்! நீ அல்லவோ உண்மையான உபகாரி! கண் தெரியாத எனக்கு நீயே என்றென்றும் வழிகாட்டியாக விளங்கி உதவி புரிய வேண்டும்!'' என்று கேட்டுக் கொண்டது. கழுதை கூறியவாறே அதற்கு வழிகாட்டும் நல்லவனாகப் பதவி ஏற்றுக் கொண்டது ஆந்தை. பிறகு, இருட்டில் கழுதையை நோக்கி, ''இப்படிப் போ! அப்படிப் போ! அங்கே புல் இருக்கிறது, குனிந்து புசி. இங்கே நீர் அருந்து!'' என்று சொல்லி அதை நடத்திக் கொண்டே சென்றது.




இவான் கிரிலோவ் எழுதிய ருஷ்ய நீதிக் கதை

பொழுது விடியும் நேரத்தில், முதுகில் ஆந்தையுடன் குருட்டுக் கழுதை சாலையை அடைந்து விட்டது. சூரிய வெளிச்சம் நெருங்கி வரத் தொடங்கியதும் ஆந்தைக்குக் கண் பார்வை குறைய ஆரம்பித்தது. இருந்தாலும் தனக்கு வெளிச்சத்தில் கண் தெரியாதென்பதைக் கழுதையிடம் கூறினால், அது இளப்பமாகும், வழிகாட்டும்படி கேட்டுக் கொண்டு கழுதை தனக்கு அளித்த பதவியும் போய் விடும் என்று நினைத்தது ஆந்தை. ஆகவே, கழுதை தயங்கித் தயங்கி நின்றபிறகும் ஒன்றும் கூறவில்லை. ஆனால் கழுதை எவ்வளவு நேரம் அவ்வாறு தயங்கி நிற்கும். முதுகிலுள்ள ஆந்தையை நோக்கி, ''இப்போது எந்தப் பக்கம் நான் நடக்க வேண்டும்?'' என்று கேட்டது. ஆந்தை இதைக் கேட்டுத் திருதிருவென்று விழித்தது. வெளிச்சத்தில் தனக்குக் கண் தெரியாது என்ற குறையை வெளிக்காட்டிக் கொள்ள விரும்பாமல், ''கழுதையே! நீ இப்போது இடது பக்கம் போக வேண்டாம். அங்கு பெரிய குளம் இருக்கிறது. அதில் விழுந்து விடுவாய். வலது புறமாக நடந்து செல்!'' என்று கூறி வைத்தது. இதை உண்மை என்று நினைத்து நடந்த குருட்டுக் கழுதை மலையின் விளிம்பு ஒன்றை அடைந்து அங்கிருந்து தொபுகடீரென்று கீழே விழுந்து மடிந்தது. நமக்கு வழி காட்டுவதற்குச் சரியானவர்களைத் தேர்ந்தெடுக்காவிட்டால் அது தான் குருட்டுத்தனமாகும் என்ற நீதியை உரைக்கிறது இந்தக் கதை.

---

ஒரு ஹோட்டல் பணியாளர்: என்னுடைய அனுபவத்தில் கண்ட உண்மை. பணக்காரர்களைவிட ஏழைகள்தான் எனக்கு அதிக இனாம் காசுகள் கொடுப்பார்கள்...

நண்பர்: அதற்கு என்ன காரணம்?

ஹோ. பணி: ஏழைகள் தாங்கள் ஏழைகள் என்பதைக் காட்டிக் கொள்ள விரும்புவதில்லை; பணக்காரர்கள் தாங்கள் பணக்காரர்கள் என்பதைக் காட்டிக் கொள்ள விரும்புவதில்லை...!

—கற்பூரம்




ஆராய்ச்சியில்கண்டவர்:
டி.ஆர். பிளேயஸ்,
எம். டி.,

அனுபவத்தில்
அறிந்தவர்: "அன்பு"

வெயிலைச் சமாளிக்க வேண்டுமா? அதற்கு இதோ சில வழிகள்: இந்த முறைகளை அனுசரிப்பதால் கோடையின் கொடுமைகளைக் கொஞ்சம் சமாளிக்கலாம்.

வெயில் காலத்தில் பனியனை எப்பொழுதும் போட்டுக் கொண்டிருக்க வேண்டும். ஏன் தெரியுமா? பனியன் வியர்வையை இழுத்துக் கொள்கிறது. இதனால் வியர்வையோடு வெளிப்படும் உப்புக்கள் சருமத்தில் படிந்து உறுத்துவது தவிர்க்கப்படுகிறது. பூட்ஸ் முதல் உள்ளே அணிந்து கொள்ளும் சிறு கால் சட்டை வரை எதுவுமே இறுக்கமாக இருத்தல் கூடாது.

2. உடல் சக்தியைக் குறைக்காமல் பேணிக்கொள்ளுவது அவசியம். எனவே, கோடை காலத்தில் வீட்டு வேலையைக் கூடிய மட்டும் குறைத்துக் கொள்ள வேண்டும். மத்தியான வேளையில் வெளியில் செல்லக் கூடாது.

3. குளிர்ந்த நீரிலோ, வெந்நீரிலோ குளிக்கக் கூடாது. வெது வெதுப்பான நீரில் குளிக்க வேண்டும். அதாவது சருமத்தின் வெப்ப நிலைக்குச் சமமான வெப்பம் உடைய நீரில் குளிக்க வேண்டும். அடிக்கடி குளிக்கக் கூடாது: தண்ணீரில் ஊறிய உடம்பு வியர்க்காமல் போய் விடும்.

4. மெதுவாக — ஆனால் நன்றாகச் சாப்பிட வேண்டும். அவசரமாகச் சாப்பிடுவது இரைப்பைக்கு அதிக வேலையை வைக்கும். இரைப்பை அதிகமாக வேலை செய்தால்உடம்பில் சூடு ஏறும். சூடு ஏறினால் உடம்பு வியர்க்கத்தானே செய்யும்?

5. தண்ணீர் பழச்சாறு முதலிய பானங்களை நிறையப் பருக வேண்டும். எத்தனைக்கு எத்தனை வியர்க்கிறதோ, அத்தனைக்கு அத்தனை அதிகமாகப் பருக வேண்டும். வெப்பம் மிக்க நாளில் உடலினின்று மூன்றேமுக்கால் காலன் நீர் வெளியேறி விடக்கூடும். இதனை ஈடு கட்டும் அளவுக்குத் தண்ணீர் பருக வேண்டும்.

6. வெப்பம் மிகுந்த நாட்களில் கடற்கரைக்குச் செல்லவோ கடலில் குளிக்கவோ கூடாது. அந்த நாட்களில் கடற்கரையில் தரை மட்டத்தில் வெப்பநிலை 140 டிகிரி வரை இருக்கலாம்.

7. நீலமும், பச்சையும் கண்ணுக்குக் குளிர்ச்சி. எனவே, மேஜை விரிப்புப் படுதா, மின்விளக்கு இவையெல்லாம் இந் நிறங்களில் இருக்கலாம்.

8. கோடையில் ஒரு மணி நேரம் அதிகமாகத் தூங்க வேண்டும். படுக்கையை வெறும் தரையில் போட்டுத் தூங்குவது மிகவும் நலம். வெப்பக் காற்று மேலே கிளம்பக் குளிர்ந்தகாற்று சூழ்ந்துநின்று இதம்அளிக்கும். இன்பம் தரும்.

9. வீட்டில் மேஜை மின் விசிறி இருப்பது நல்லது. பகலில் அதைச் சற்றுத் தள்ளி, சுவர் அருகே வைத்துச் சுழல விட வேண்டும். நட்சத்திரங்கள் கண் சிமிட்டும் இனிய இரவிலே திறந்துள்ள ஜன்னலுக்கு மூன்று அடி தள்ளி வைக்க வேண்டும். வெப்பக் காற்று இந்த ஒரு ஜன்னல் வழியாக வெளியேறக் குளிர்ந்தகாற்றுமற்ற ஜன்னல்கள்மூலம் உட்புகும்.

10. மாலையில் அலுவலகத்திலிருந்து வந்தபின்னர் கால் இலேசாக வீங்கி யிருப்பதாகத் தெரிந்தால் காலைச் சற்று நேரம் வெது வெதுப்பான நீரில் அமிழ்த்தி வைத்திருக்க வேண்டும். இதற்குக் குளிர்ந்த நீர் உபயோகிக்கலாகாது. அது இரத்தக் குழாய்களைக் குறுக்கி இரத்தத்தை வடிய விடாமல் செய்துவிடும்.













## பருக்கள் மறைந்து விடுகின்றன

சருமம் மிருதுவாகவும் வழுவழுப் பாகவும் ஆகிவிடுகிறது

நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப்பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும் வழுவழுப்பாகவும் மாசு மருவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடெர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள் கட்டிகள், செந்நிறத் தழும்புகள், மேலாக பரவும் படை, படர்தாமரை, வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும், பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞானமுறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி, உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழுவழுப்பாகவும் இருக்கச் செய்யும் என்ற பூரண நம்பிக்கையுடன் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

---

## பலந்தீர்க்கும்

## ஆரோக்கியந்தீர்க்கும்

பண்டிட் D. கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

69 வருடங்களாக

ப்ரசித்தி பெற்றது

## ஆயுர்வேதாஸ்ரமம்

சென்னை - 17.

---

## கடும் கோடையில் கோலாகலம்!

அருந்துங்கள்

# ஜில்-கோலா

## வின்ஸென்டின் நவீன பானம்

ஜில்லிட்டு அருந்துங்கள்



பேப்பர் போடுகிற பையன் அந்தப் பத்திரிகையைப் போட்டுவிட்டுப் போனதுதான் தாமதம். வீட்டிலிருந்த இளவட்டங்கள் அனைத்துமே ஓடி வந்தன அதை எடுக்க.

அதிர்ஷ்டம் அநுஷாவுக்குத்தான். புத்தகத்தைக் கையில் எடுத்துக் கொண்டு ஜான்ஸி ராணியைப் போல் கம்பீரமாக நடந்து சென்றாள். அவள் முகத்தில் அளவுகடந்த பெருமிதம் நிரம்பி வழிந்தது.

''சீக்கிரம் கொடுடி. நான் துணுக்குகளை மட்டும் படித்து விட்டுக் கொடுத்துவிடுகிறேன்'' — இது ரகு.

''நான் 'செகண்ட்'. கார்ட்டூனை மட்டும் பார்த்துவிட்டுத் தந்துவிடுகிறேன்'' — இது மூர்த்தி.

''அநு! அரசியலை மட்டும் ஒரு நோட்டம். நீ நல்ல பொண்ணுயிற்றே! பிளீஸ்!'' மூத்தவன் மாதவன் அநுஷாவுக்குக் கௌரவமான முறையில் 'ஐஸ்' வைத்தான்.

''அக்கா! சித்திரத்தொடர் கதையை மட்டும் படித்துவிட்டுத் தரேன்...'' பத்மாவின் குழைவு.

இந்தச் சூழ்நிலையில் குடுகுடுவென்று அங்கே ஓடி வந்தாள் சாரு.

''அநு! சித்தெக் கொடுமே... தொடர் கதையைமட்டும் ஐந்தே நிமிஷங்களில் படித்து விட்டு உன்னிடமே தந்துவிடுகிறேன். தயவு செய்து கொடுமே...'' என்று குழந்தையிலும் குழந்தையாகக் கெஞ்சினாள்.

''ஒருத்தருக்கும் தர முடியாது. நான் தானே முதலில் எடுத்தேன்! நான் முழுக்கப் படித்துவிட்டுத்தான் தருவேன்...'' எல்லோருக்கும் ஒரே பதிலாகச் சொல்லிவிட்டுப் புத்தகத்தில் மூழ்கிப் போனாள் அநுஷா.

''பார், அத்தை!'' தன் மாமியாரும், அத்தையுமான சுந்தரம்மாவிடம் முறையிட்டாள் சாரு.

சுந்தரம்மாவின் முகத்தில் ஜிவுஜிவுவென்று செம்மை பரவியது. இடக் கண் உள் அறைப் பக்கம் திருட்டுத்தனமாக ஓடி மீண்டது. பிறகு, ''சாரு! நீ உள்ளே போ! எல்லோரும் பார்த்த பிறகு கொண்டு வந்து கொடுப்பார்கள்'' என்று உத்தரவிட்டாள்.

''என்னத்தை நீ....'' என்று சிணுங்கிய படியே உட்பக்கம்நோக்கி நடந்தாள் சாரு.



''இதோ பார் சாரு! நீ இனிமேல் இந்த மாதிரி முன் பக்கம் வந்து பேசக் கூடாது. அருஷாவை 'டீ' போட்டுப் பேசவும் கூடாது. அவள் உனக்கு அத்தை பெண் மட்டுமல்ல; நாத்தனாரும் கூட. மரியாதையாகப் பேச வேண்டும்'' என்றாள் கடுகடுப்பான குரலில்.

ஒரு கணம் விக்கித்துப் போய்விட்டாள் சாரு. ''அத்தை!'' என்று அழைத்து எதையோ சொல்ல விரும்பினாள்; முடிய வில்லை. அழுகை வாயைக் கட்டிவிடவே, விம்மிக் கொண்டே உள்ளே ஓடி விட்டாள்.

''நான் இனிமேல் வெறும் அத்தை மட்டு மல்ல'' என்று கூறிய சுந்தரம்மாவின் சொல்லும் அவளைத் துரத்தி வந்து அவளைத் தாக்கியது. குலுங்கிக் குலுங்கி அழுதாள் பேதை சாரு.

''சாரு! இதற்காக நீ அழலாமா?'' என்று ஓரகத்தியின் முகத்தைப் பற்றி நிமிர்த்திக் கேட்டாள் சீதா.

''பாருங்கோ, மன்னி! அத்தை எப்படிப் படபடவென்று பேசிவிட்டாள்! அருஷாவை நான் 'டீ' போட்டுக் கூப்பிடக் கூடாதாம்; முன் அறைப் பக்கம் வரக் கூடாதாம். எப்படிப் பேசினாள் பார்த்தீர்களா?'' குழந்தை மாதிரி கேவினாள் சாரு.

''உஸ்... இனிமேல் அத்தையையும் நீ வாங்கோ, போங்கோ என்று பன்மையாகத்தான் கூப்பிட வேண்டும் சாரு. அவர் நமக்கு மாமியார் இல்லையா?'' என்று கேட்டாள் சீதா.

ஓரகத்தியை வியப்பு மேலிட நோக்கினாள் சாரு. 'அத்தை, அத்தையில்லையா? மாமியார் என்றால் இப்படித்தான் இருப்பார்களா?' ஒன்றுமே புரியாமல் விழித்தாள் அந்தக் குழந்தைப் பெண்.

''என்ன யோசிக்கிறாய் சாரு!'' சிரித்துக் கொண்டே வினவினாள் சீதா.

''கலியாணம் ஆவதற்கு முன்பு அத்தையை வா, போ என்றுதான் அழைப்பேன். அருவையும் வாடி போடி என்றுதான் கூப்பிடுவேன். எல்லா அத்தானோடும்தான் சகஜமாகப் பேசி விளையாடுவேன். இப்போது என்னடா என்றால் அத்திம்பேர் கூடவும் பேசக்கூடாதாம். ஒரு அத்தான் கூடவும் பேசக் கூடாதாம். கலியாணம் செய்து கொண்டதற்கு இவ்வளவு தண்டனையா மன்னி? உறவே மாறிப்போச்சே!'' கண் கலங்கினாள் சாரு.

''இதுதான் வாழ்க்கை சாரு. போகப் போக நீயே புரிந்து கொள்வாய்...'' என்று சொல்லிவிட்டுத் தன் வேலையைக் கவனிக்கச் சென்றுவிட்டாள் சீதா.

சாரு ஒன்றும் புரியாமல் குழம்பித் தவித்தாள். அவளைச் சொல்வதிலும் குற்றமில்லை. அவள் வளர்ந்து பெரியவளான விதமே அப்படி.

அவளுடைய பெற்றோருக்கு அவள் ஒரே செல்வக் குமாரி. பத்து வருடங்கள் மகப்பேறு இல்லாமல் இருந்து வேண்டாத தெய்வங்களையெல்லாம் வேண்டித் தவமிருந்து, பெற்ற குழந்தை. அன்புக்கும் அரவணைப்புக்கும் கேட்பானேன்? இல்லாமையே இல்லாமல் அலட்சியத்துக்கே இடமில்லாமல் செல்வமாக வளர்க்கப்பட்டவள். அன்பைத் தவிர எதையுமே அறியாதவள். வருடங்கள் விரைந்து வயதை உயர்த்திவிட்ட பிறகும் கூடச் சாரு இன்னமும் வெகுளித்தனம் மிகுந்த குழந்தையாகவே இருந்தாள்.

அவளுடைய அப்பா அப்புசாமிக்குத் தன் அருமந்தக் குமாரியை ரொம்பப் பெரிய இடத்தில் கொடுக்க வேண்டுமென்கிற ஆசை. தன் சகோதரி சுந்தரம்மாவின் மகன் மாதவனுக்குச் சாருவைக் கொடுப்பதில் அவருக்குக் கொஞ்சம் கூட விருப்பமில்லை. மாதவன் பி. எஸ்ஸி. படித்து விட்டு நல்ல வேலையில் தான் இருந்தான். இருந்தாலும் ஏகப்பட்ட சம்சாரம். நான்கு பிள்ளைகள், மூன்று பெண்கள் சுந்தரம்மாவுக்கு. பெண்களெல்லாம் கடைசியில் பிறந்துவிட்டதால் பிள்ளைகளின் பொறுப்பும் மகத்தானதாகவே இருந்தது. நிறைய வாரிக் கொடுக்க வீட்டில் வசதி இருக்கையில் தன் ஒரே மகளை அத்தனை பெரிய சம்சாரி வீட்டில் எதற்காகக் கொண்டு போய்க் கொடுக்க வேண்டும் என்பது அவர் கட்சி.

அவருடைய மனைவி அன்னத்தின் அபிப்பிராயமோ வேறாக இருந்தது.

செல்லமாக வளர்க்கப்பட்ட வெகுளிப் பெண்ணான சாருவுக்கு அவளுடைய பிறப்பின் அருமையும், வளர்ப்பின் பெருமையும் தெரிந்த இடமாக இருக்க வேண்டும். சாருவின் வெகுளித்தனமான பேச்சுக்களையும், நடத்தைகளையும் 'அது ஒரு அசடு, ஒன்றும் தெரியாது' என்று பெயரிட்டு ஒதுக்கிவிடாமல், 'குழந்தைப் பெண், வெகுளித்தனம்' என்றே கருதி அனுசரித்துக்கொண்டு போகிற பரிவு உள்ளம் — பாச மனம் உள்ள இடமாக இருக்க வேண்டும் என்று எண்ணினாள்.

''வெறும் சம்பாத்தியம் மட்டும்தான் மாதவனுக்கு'' என்று வாதிட்டார் அப்புசாமி.

''அதையும் முழுக்க முழுக்கத் தனக்காகச் செலவிட்டுக் கொள்ள முடியாது என்பதும் எனக்குத் தெரிகிறது. இருந்துவிட்டுப் போகட்டுமே! நம்முடையதெல்லாம் அவளுக்குத் தானே? மாதவனுக்குக் கொடுத்து விட்டால் கவலையில்லை. சாருவுக்கு அருகில் ஒன்றும் மாறுதலிருக்காது. நம் வீட்டில் இருப்பது போலவே அவள் அங்கிருக்கலாம். உங்களையும் என்னையும் விட உங்களுடைய சகோதரி சாருவை நன்றாக வைத்துக் கொள்வாள். நமக்கு நம் குழந்தையின் சந்தோஷம்தான் முக்கியமே தவிர, பணமும் பவிஷுமல்ல. பேசாமல் சாருவை மாதவனுக்கே கொடுத்து விடுங்கள்'' என்று ஒரே போடாகப் போட்டுக் கலியாணத்தை நடத்திவிட்டாள் அன்னம்.

ஆனால் இப்போது நடந்ததோ...?

சுந்தரம்மா இப்போது முன்போல் இல்லை சாருவிடம். பெற்ற தாய்க்கும் மேலான பாசத்தையும் பரிவையும் காட்டுகிற பழைய அத்தையாக அவள் இப்போது இருக்கவில்லை. கண்டிப்பும், கறாரும் மிகுந்த ஒரு மாமியாராகத்தான் அவள் சாருவிடம் நடந்து கொண்டாள். மாமியார் — மாமனார் மைத்துனன் — நாத்தனார் ஆகியவர்களுக்கும் அந்தந்த உறவுக்குரிய மரியாதைகளையெல்லாம் அவள் சாருவிடம் எதிர்பார்த்தாள். தன் தம்பி மகள் என்பதற்காக எந்தச் சலுகையையும் தர விரும்பவில்லை. கருக்க

மாகச் சொல்லப் போனல் சுந்தரம்மா சாருவைத் தன் தம்பி மகள் — தன்னுடைய மருமாள் என்று நினைத்து நடத்தவில்லை. தன் மருமகளாகவே அவளை நடத்திஞள்.

அவையெல்லாம் சாருவுக்குப் புதிய அநுபவங்களாக இருந்தன. அதனல் அவள் ரொம்பவும் குழம்பித் தவித்தாள். தாலி கட்டிய கணவரைப் பெயர் சொல்லி அழைக்கிறேமே என்பதை மறந்து 'மாது அத்தான்' என்றே தன் கணவனை அழைத்து விட்டு மாமியாரிடம் வசவு வாங்கிக் கொள்வாள். நாத்தனார்களான அநுஷா, பத்மா, ஷீலா ஆகியோரிடமும் பழைய தோழமையுடன் பழக விழைந்து மூக்குடை பட்டு நிற்பாள். தன் மாமனரிடமும் புதிய உறவுக்குரிய சட்டதிட்டங்களை மறந்துவிட்டு, 'அத்திம்பேர்! எலுமிச்சம் பழ ரசம் எப்படி? நான் செய்தேன்!' என்று கேட்டுவிடுவாள். பிறகு வீட்டில் நடப்பதைப் பற்றிக் கேட்கவா வேண்டும்? இதனலெல்லாம் அவள் அடைந்த வருத்தம் சொல்லி முடியாது. தாலி கட்டிய தோஷத்துக்காக இப்படியா எல்லோரும் மாறிவிடுவார்கள்! மாறிவிடத்தான் வேண்டுமோ? அப்படியானல் பழைய சகஜ பாவம் இனிமேல் திரும்பவே திரும்பாதா? அது தான் உண்மை யென்றல் அவளுக்கு இது முன்பே தெரிந்திருந்தால் மாது அத்தானை மணக்கவே மறுத்துவிட்டிருக்கலாமே! அநியாயமாக ஒரு நெருக்கமான உறவும் பாசமும் மிருந்த குடும்பத்தினரின் மெய்யான அன்பையெல்லாம் இழந்து விட்டோமோ' என்று வருந்திஞள். ஆம். உண்மையில் அன்பும் முழுமையில்லாத பாசமும்தான் குற்றம் காணும் தன்மை வாய்ந்தவை. குற்றம் கண்டு பிடிக்கும் தன்மை எப்போது வருகிறதோ அந்தக் கணமே அன்பின் முழுமை குலைந்து விடுகிறது. அதாவது சாரு ஓர் அன்பே உருவான — பாசமே உறவான அத்தையை இப்போது இழந்துதான் விட்டாள். அத்தையை இழந்துதான் அவள் மாமியாரை அடைந்திருக்கிருள். இப்படித்தான் அவளால் எண்ண முடிந்தது. அப்படி யிருக்கையில் 'மாது அத்தானைக் கல்யாணம் செய்து கொண்டதால், நாம் நம் அத்தையை இழந்து விட்டோம்' என்று அவள் எண்ணுவதில் தவறேது? இழப்பின் அநுபவத்தை உணர்ந்த பின், அதை இழப்பு என்று நினைப்பதும், கூறுவதும்தானு தவறு?

எத்தனை யோசித்தபோதிலும் சாருவால் தெளிவு பெற முடியவில்லை. எதையோ பறி கொடுத்துவிட்டது போல் அவள் ஏங்கத் தொடங்கிஞள்.

அன்று காலையிலிருந்தே சாருவுக்கு உடம்பு சரியாக' இல்லை. மகளின் முகவாட்டத்தைப் புரிந்து கொண்ட அன்னம், வேகமாகத் தன் கணவரை அணுகி, விஷயத்தைச் சொன்னள்.

''நர்ஸிங் ஹோமுக்கு அழைத்துப் போய் விடலாமா?'' என்று பறந்தார் அப்புசாமி.

''இப்பவே பிடித்து எதற்காக? வேண்டாம். இன்னும் கொஞ்சம் போகட்டும். வலி அதிகரித்த பிறகு அழைத்துப் போனல் போதும்'' என்ருள்.

''அப்ப, என்னதான் செய்யச் சொல்கிருய்?'' தவித்தார் அவர்.

''டிரைவரிடம் விஷயத்தைச் சொல்லி யனுப்பி உங்களுடைய அக்காவைக் கையோடு அழைத்து வந்துவிடச் சொல்லுங்கள். அவருக்குத்தான் இந்த மாதிரி விஷயங்களிலெல்லாம் அநுபவம் அதிகம். எனக்குத் தைரியம் போதாது. அக்கா சாருவுடன் நர்ஸிங் ஹோமிலிருந்து கவனித்துக்கொள்ளட்டும். நான் இங்கே பார்த்துக்கொள்கிறேன்.''

''சரி...'' என்று துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டார் அப்புசாமி.

''நில்லுங்கள் அப்பா!''

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தனர் இருவருமே.

சாருதான் மீண்டும் பேசிஞள்.

''அத்தையை அழைத்து வரவேண்டாம். அம்மாவுக்குத் தைரியம் இல்லாவிட்டால் பரவாயில்லை. நர்ஸ்களின் உதவியும் துணையுமே எனக்குப் போதும்.''

''பைத்தியம் மாதிரி உளருதே சாரு. இந்த மாதிரி சமயங்களில் பெற்ற தாயார் பக்கத்தில் இருக்கக் கூடாது என்று சொல்வதுண்டு. அத்தை — பாட்டி — சித்தி — பெரியம்மா என்று ரத்த பாசமுள்ளவர்கள்தான் பக்கத்தில் இருக்க வேண்டும்'' என்ருள் அன்னம் அழுத்தமான குரலில்.

---

## ஒரு 'மொரார்ஜி'க் கதை!

பையன் படிக்காமல் சுற்றிக் கொண்டிருப்பதைப் பார்த்த தந்தை கூப்பிட்டுக் கேட்டார் :

''என்னடா, ஏதாவது படித்தாயா?''

'' ஒரு 'மொரார்ஜி' கூடப் படிக்கவில்லை.''

''ஏன்?''

''கண் வலி. ஒரு மொரார்ஜிகூடத் தெரியவில்லை.''



''போகிறது. இதென்னடா சட்டை?''

'' 'மொரார்ஜி' குதிரைச் சட்டை!''

''வாயை மூடு. எடுத்ததற்கெல்லாம் ஏன் 'மொரார்ஜி' 'மொரார்ஜி' என்கிருய்?''

'' 'வரி' என்ற வார்த்தைக்குப் பதிலாக 'மொரார்ஜி'யைப் பயன்படுத்தினேன். அவ்வளவுதான்.''

- வி. எஸ். மணியன்

---

''ஒப்புக்கொள்கிறேனம்மா. ஆனால் நீ நினைக்கிற மாதிரியான அத்தை எனக்கு இப்போது இல்லை. இதை நான் ரொம்ப வருத்தத்துடன்தான் சொல்கிறேன்.''

''என்னடி பேத்துகிறாய்?''

''கோபித்துக் கொள்ளாதே அம்மா. அத்தை, அத்தையாக இருந்திருக்க வேண்டுமென்று விரும்பியிருந்தால் நான் அவளுடைய பிள்ளைக்கு வாழ்க்கைப்பட்டிருக்கக் கூடாது. நாம் அந்தத் தவற்றைச் செய்தாகிவிட்டது. அதன் பலன்...? நான் இப்போது ஒரு நல்ல அத்தையை இழந்து விட்டேனம்மா...'' சாரு விம்மத் தொடங்கினாள்.

''அசட்டுப் பெண்ணே! உன் புக்ககத்தில் உன் அத்தை இல்லாமல் எங்கே போய் விட்டாள்?'' என்று அதட்டினார் அப்புசாமி மகளை.

''என் புக்ககத்தில் நீங்களிருவரும் நினைக்கிற மாதிரி என் அத்தை இல்லை. அங்கே சுந்தரம்மா என்கிற பெயரில் இருப்பவர் என் மாமியார் அம்மா, என் மாமியார்!'' அழுத்தம் திருத்தமாகக் கூறினாள் சாரு.

பெற்றவர்கள் இருவருமே வியப்பினால் மலைத்துப் போய் நின்றார்கள்.

''எதற்கு வீண் விவாதம்? அத்தையை அழைத்து வரவேண்டாம். உங்களுக்குக் கஷ்டமாக இருந்தால் வேலைக்காரி பொன்னம்மாவை என்னுடன் வந்து இருக்கச் சொல்லுங்கள்'' என்று சொல்லிவிட்டு அப்பால் சென்றுவிட்டாள் சாரு.

மகளின் விருப்பத்தை மீறுகிற துணிவில்லாததால் முதலில் சுந்தரம்மாவுக்குச் சொல்லியனுப்பாமல்தான் இருந்தார்கள். அப்புசாமியும் அன்னமும். ஆனால் நாம் நினைக்கிறபடி எதுதான் நடைபெறுகிறது? மூன்று நாட்களாகச் சாரு பிரசவ வேதனைப் பட்டும்கூடப் பிரசவம் ஆகவில்லை. அதனால் வேறு விதியில்லாமல் அப்புசாமி தன் சகோதரியை நர்ஸிங் ஹோமுக்கு அழைத்து விட்டார்.

சுந்தரம்மா வந்தவுடன், ''ஏன் எனக்கு முதலிலேயே சொல்லி அனுப்பவில்லை?'' என்று ரொம்பவும் கடிந்து கொண்டாள். உடனே லேடி டாக்டருடன் கலந்து பேசினாள். அவர்களும் இதற்குள் ஒரு முடிவுக்கு வந்திருந்தார்கள். இனியும் தாமதிக்கக் கூடாது என்பதே அது.

''குழந்தையால் தாங்க முடியாது. ஆயுதம் போட்டு எடுத்து விடுங்கள்'' என்று சுந்தரம்மாவும் வற்புறுத்தவே டாக்டர்கள் பரபரவென்று இயங்கினார்கள்.

உரிய நேரத்தில் சாருவுக்கு ஓர் அழகான பெண் குழந்தை பிறந்தது. எல்லோரும் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தார்கள்.

மாதவன் மட்டும் ''பூ! இவ்வளவு கஷ்டப் பட்டுக் கடைசியில் பெண் குழந்தைதானா?'' என்று குறும்பாக அலுத்துக் கொண்டான்.

''மூடுடா வாயை! குழந்தை எந்த இனமாக இருந்தால் என்னடா? என் குழந்தை பெற்றுப் பிழைத்து எங்கள் எல்லோருடைய வயிற்றிலும் பாலை வார்த்தாளே! அதைச் சொல்லுடா. நான்பட்ட கவலை கொஞ்சமா, நஞ்சமா? வேண்டாத தெய்வம் பாக்கியில்லை. தெரியுமா உனக்கு?'' என்று மகனை வாங்கு வாங்கிவிட்டாள் சுந்தரம்மா.

''என்ன இருந்தாலும் தம்பி பெண்ணாயிற்றே! விட்டுக் கொடுப்பாயா நீ?'' என்று கேலி செய்தான் மாதவன்.

சாருவுக்கு உண்டான ஆச்சரியத்துக்கு அளவேயில்லை. அவளுக்கு தன் அத்தையைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை.

குழந்தை பிறந்து பத்து நாட்களாகியது. சாருவும் பூரண குணம் பெற்றாள். தாயையும் குழந்தையையும் வீட்டுக்கு அழைத்து வந்தார்கள். தொட்டிலிடும் வைபவமெல்லாம் முடிந்த மறுநாள் சுந்தரம்மா சாருவிடம் வந்தாள்.

''சாரு! இனிமேல் கவலையில்லை. வேலைக்காரி பொன்னம்மா இருக்கிறாள். உன் அம்மாவும் கவனித்துக் கொள்ளுவாள். இரண்டிலே மூன்றிலே குளியல் முறைகளுக்கு மட்டும் நான் வந்து கவனித்துக் கொள்கிறேன். இன்று போய் வரட்டுமா? அங்கே வீடு எந்த அழகில் இருக்கிறதோ...'' என்றாள். அத்தையையே உற்று நோக்கினாள் சாரு.

பத்துப் பன்னிரண்டு நாட்களாகத் தன்னையும் குழந்தையையும் கோழி தன் குஞ்சுகளைப் பாதுகாப்பது போல் பாதுகாத்ததையும், நர்ஸுகளின் தயவை ஒன்றுக்கும் எதிர் பார்க்காமல், இரவு பகல் என்றில்லாமல் செய்த ஒவ்வொரு செய்கைகளையும், பராமரிப்பையும் எண்ணிப் பார்த்தாள். நல்ல சாப்பாடும் சரியான தூக்கமும் அல்லாமல் அந்த வயதான உடலில் ஏற்பட்டிருந்த சோர்வையும் தளர்ச்சியையும் கண்டாள். எத்தனை வேலைக்காரிகள் இருந்தாலும் தன்னை இப்படி அருசியின்றி, வெறுப்பு விருப்பு இல்லாமல் கவனித்துக் கொண்டிருக்க மாட்டார்கள் என்பதை உணர்ந்தாள். இருந்தும் அவளுக்கு ஒரு விஷயம் புரிபடாமலேதான் இருந்தது. இப்போது இப்படியெல்லாம் அன்பைச் சொரியும் அத்தை இதற்கு முன்பு கண்டிப்பும் கறாருமாக — அதிகாரமும் அலட்சியமுமாக இருந்தது ஏன்?

''என்ன சாரு, பதிலையே காணோம்?'' என்று கேட்டாள் சுந்தரம்மா.

''ஒன்றுமில்லை அத்தை!''

''உடம்பைப் பார்த்துக் கொள். ஈரத் தரையில் நடமாடாதே. கனமான சாமான் எதையும் தூக்காதே. பத்தியம் சாப்பிட்டவுடன் படுத்துத் தூங்கிவிடாதே! கொஞ்ச நேரம் உட்கார்ந்து இருந்துவிட்டுப் பிறகு படுத்துக்கொள்...'' என்று சொல்லிக் கொண்டே போனாள் சுந்தரம்மா.

இதற்கு மேல் சாருவினால் உள்ளத்தின் நெகிழ்ச்சியை அடக்கிக் கொள்ள இயலவில்லை.

''அத்தை! என்னை... என்னை... மன்னித்து விடு!'' என்று கூறி அத்தையின் கைகளைப் பற்றிக் கொண்டு விம்மினாள்.

''என்னடி குழந்தை! ஏதேதோ சொல்கிறாய்? பச்சை உடம்பில் இப்படியெல்லாம் அழக்கூடாது'' என்ற சுந்தரம்மா பரிவு மேலிடத் தன் புடவைத் தலைப்பினால் சாருவின் கண்களைத் துடைத்து விட்டாள்.

''உன்னை நான் தவறாகப் புரிந்துகொண்டு விட்டேன் அத்தை! நீ மாறிப்போய்விட்டாய்.

# பழம்பெருமை படைத்திருந்தும் நவீனமாக இருப்போர் யார்?




**அது நாங்கள்.** துணி உற்பத்தியே எங்கள் தொழில் — இந்த நூற்றாண்டு துவங்கிய முதலே இயங்கி வந்துள்ளவர்கள். அது நாங்கள்தான் லால்பாய் க்ருப். எங்கள் ஏழு நெசவாலைகளின் ஒருமித்த அனுபவம் 322 ஆண்டுகள். தரமான துணிகளை உங்களிடம் வந்தடையச் செய்வதுதான் எங்கள் பரம்பரைப் பணியாகத் திகழ்கிறது. மரபை மதிப்போர் நாங்கள், ஆனால் பழைய கர்நாடகம் அல்ல. அதற்கு நேர்மாறாக, எங்கள் ஆலைகள் அதி நவீனமான உத்திகளையும் எந்திர சாதனங்களையும் பயன்படுத்தி எல்லாவகைத் துணிகளையும் உற்பத்தி செய்து வருகின்றன. பரம்பரைத் தர உயர்வோடு நவீன நாகரிகப் பண்பையும் இணைத்துத் தரும் துணிகள்.

எப்போது துணி வாங்கினாலும் அதன் மீது லால்பாய் டிரேடு மார்க் இருக்கிறதா பாருங்கள்.

# லால்பாய் க்ருப்

- தி அரவிந்த் மில்ஸ் லிமிடெட்.
- தி ராய்ப்பூர் மானுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்.
- தி அசோகா மில்ஸ் லிமிடெட்.
- தி ஸர்ஸ்பூர் மில்ஸ் லிமிடெட்.
- தி அருணா மில்ஸ் லிமிடெட்.
- தி அகமதாபாத் நியூ காட்டன் மில்ஸ் கம்பெனி லிமிடெட்.
- தி நூதன் மில்ஸ் லிமிடெட்.




என்மேல் உனக்கு அன்போ ஆசையோ இல்லாமற் போய்விட்டதாக எண்ணி விட்டேன், அத்தை. என்னை மன்னித்துவிடு. நீ பழையபடிதான் இருக்கிறாய். நீ மாற வில்லை அத்தை. நீ மாறவில்லை....''

கொட்டித் தீர்த்துவிட்டாள் சாரு - தன் மனப் போராட்டங்களை யெல்லாம். கலகல வென்று பெரிதாக நகைத்தாள் சுந்தரம்மா.

''நல்ல பெண்ணடி சாரு நீ! நான் மாறுவதா? நான் எதற்காக மாற வேண்டும்? நான் இங்கே வந்தால்தான் உன் அத்தை. நீ அங்கே வந்தாலோ நீ என் மருமகளும் நான் உன் மாமியாராகவும் ஆகி விடு கிறோம். உனக்கு முன்பே வந்த மருமகள் ஒருத்தி எனக்கு இருக்கிறாள். உனக்குப் பிறகும் வரவேண்டிய மருமகள்கள் எனக்கு உண்டு. நான்கு மருமகள்களின் மாமியாரான நான் எப்படி இருக்க வேண்டும்? எப்படி இருக்க முடியும் சாரு! ஒரு பெண் தன் பிறந்தகத்தில் இருப்பது போல் தன் புக்ககத்தில் இருக்க முடியுமா? இங்கே அன்பு காட்டுவது போல் அங்கே பண்பு காட்ட வேண்டும். இங்கே பயமில்லாமல் சலுகை. அங்கே மரியாதையுடன் கூடிய செய்கை. நீயும் சீதாவைப் போல் பிறந்தகத்துக்கும் புக்ககத்துக்கும் உள்ள வேறுபாட்டைப் புரிந்துகொண்டிருந்தால் நானும் உன்னிடம் அப்படி யெல்லாம் நடந்து கொண்டிருக்க மாட்டேன்.''

''உண்மைதான் அத்தை...''

''உன்னை உன் போக்கிலேயே விட்டிருக்கலாம். அப்படியிருந்தால் சீதாவும் என் பிள்ளைகளும் என்னைப் பற்றி என்ன நினைப்பார்கள்? தன் தம்பி பெண் என்று தலையில் வைத்துக் கொண்டு ஆடுகிறாள். மற்றவர்களிடம்தான் கட்டுப்பாடும் சட்ட திட்டமும் என்று சொல்ல மாட்டார்களா? அங்கே நான் உன்னை எப்படி என் தம்பி பெண்ணாக நினைக்க முடியும்? அங்கே வேற்றுமையைக் காட்ட முடியுமா என்னால்? சீதாவும் நீயும் எனக்கு ஒன்றுதான் என்பதைத்தானே நான் காட்டிக் கொள்ள வேண்டும்? யோசித்துப் பார் சாரு.''

''ஆமாம், அத்தை! அதையெல்லாம் நான் இப்போதுதான் புரிந்து கொண்டேன்.''

சுந்தரம்மா மேலும் சொன்னாள்:

''அங்கே நான் அப்படியெல்லாம் உனக்குப் பயிற்சி அளித்ததால் எனக்கு உன்மேல் பாசமே இல்லை என்று நீ எண்ணிவிட்டாய். என் குழந்தையை வாழ வைக்க வந்தவளிடம் பாசம் இல்லாமல் இருக்கலாம். அன்பும் ஆசையும் இல்லாமலா போய்விடும்? உனக்கு இப்போது செய்த மாதிரி சீதாவுக்கும் என்னால் செய்ய முடியும் சாரு. அவளுக்கே அப்படிச் செய்ய முடியும் என்கிறபோது என் தம்பியின் மகளான உனக்குச் செய்யாமலிருக்க என்னால் முடியுமா? இப்போது நமக்கிடையே இரண்டு வித உறவுகள் இருக்கின்றன. உன்னிடம் நான் மாமியாராக நடந்து கொள்ள வேண்டிய சமயத்தில் மாமியாராக நடந்து கொள்ள வேண்டியிருக்கிறது. நடந்து கொள்கிறேன். அத்தையாக நடந்து கொள்ள வேண்டிய சமயத்தில் அத்தையாகவும் நடந்து கொள்ளுகிறேன். ஒன்றுக்காக இன்னொன்றை விட்டு விடலாமா? இதையெல்லாம் நீ புரிந்து கொள்ள வேண்டும். புரிந்தும் கொள்வாய். இன்று இல்லாவிட்டால் இன்னொரு நாள் நீயும் மாமியாராக ஆகப்போகிறவள்தானே?'' மருமகளின் கன்னத்தை நிமிண்டிவிட்டுக் கேலி செய்தாள் சுந்தரம்மா.

''போ, அத்தை!'' என்று தலையைக் கவிழ்த்துக் கொண்டாள் சாரு.

''இதோ பாருடியம்மா! இங்கே 'வா அத்தை, போ அத்தை!' என்று சொல்கிற மாதிரி அங்கே வந்த பிறகும்...''

''சொல்ல மாட்டேன், அத்தை. கவலைப் படாதீர்கள்'' என்று கூறிய சாரு அன்பும் ஆசையும் மிகுந்தவளாய் அத்தையின் கைகளைப் பற்றித் தன் கன்னங்களில் வைத்து அழுத்திக் கொண்டாள்.

''சரி, நான் வரட்டுமா? குழந்தையை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். நான் போய் அண்ணாவிடம் சொல்லிக் கொண்டு கிளம்புகிறேன்'' என்று சுந்தரம்மா தன் கைகளைச் சாருவிடமிருந்து மெல்ல விடுவித்துக் கொண்டு எழுந்து சென்றாள்.

அப்படிச் சென்ற அத்தையை வெறிக்கப் பார்த்துக் கொண்டு செயலற்று உட்கார்ந்திருந்தாள் சாரு. 'பெண் என்று பூமிதனில் பிறந்து விட்டால் அவளுக்குத்தான் எத்தனை எத்தனை பொறுப்புக்கள்! எத்தனை எத்தனை சட்ட திட்டங்கள்! எல்லாவற்றிலும் திறம்பட நடந்து கொண்டு வெற்றி காண்பவள் எவளோ, அவளே பெண் என்கிற சொல்லுக்கு உரிய கௌரவத்தைப் பெறுகிறாள். பெண் குலத்துக்குப் பெருமை தேடித் தருகிறாள். ஆனால் அவளுடைய அந்த முயற்சியைத்தான் 'புதிர்' என்று கூறுகிறார்களோ!' என்று தோன்றியது அவளுக்கு.

**Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10**
**Managing Editor: T. Sadasivam**




# தரத்தை மதிப்பீராயின், தரும் விலைக்குத் தக்க மதிப்பைத் தருவது ரெக்ஸ்!

எங்கள் ஸ்க்வாஷ்கள், நேர்த்தியிலும் நேர்த்தியானவை யாகப் பார்த்துப் பார்த்துப் பறித்த பழங்களிலிருந்து தயாரிக்கப்பட்டவை. பிறகு, தெள்ளிய தூய சீனிப் பாகும் வேறு பல விசேஷச் சரக்குகளும் சேர்க்கப்பட்டவை. எனவே, கலைத்தறியாப் புத்துணர்ச்சி தரும் பானமாக உங்களை அடைகிறது ரெக்ஸ்.




கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட்,  பம்பாய்-1.

*Bensons/1966A-TM*

